# மீண்டும் வாழ்ந்தால்.....?





மகாகனம்

வ. ச. ஸ்ரீநிவாஸ சாஸ்திரியார்

மகாகனம் ஸ்ரீ நிவாச சாஸ்திரிகளைப் பற்றி அறியாத இந்தியர் மிகக் குறைவாகத்தான் இருக்க முடியும்.

சாதாரண ஏழைக் குடும்பத்தில் பிறந்து பள்ளிக்கூட உபாத்தியாயராக இருந்த இவர். இந்திய ஊழியர் சங்கத்தில் சேர்ந்து நமது நாட்டுக்காகப் பல வகையில் உழைத்து உலகப் பிரசித்தி பெற்ற பெரியவராய் விளங்கினார்.

இவர் வாழ்க்கை பல பிரச்னைகளும், பிரச்னை விடைகளும் நிறைந்தது.

# மீண்டும் வாழ்ந்தால்...?

(கட்டுரைகள்)

மகாகனம்

வ. ச. ஸ்ரீநிவாஸ சாஸ்திரியார்



பதிப்புரிமை]

கலைமகள் காரியாலயம்

மயிலாப்பூர் : : சென்னை-4

[விலை ரூ. 2/-

*முதற் பதிப்பு—ஜூன், 1944.*
*இரண்டாம் பதிப்பு—செப்டம்பர், 1954.*

## பொருளடக்கம்



PRINTED AT
THE MADRAS, LAW JOURNAL PRESS,
MYLAPORE, MADRAS

# பதிப்புரை

தமிழ் மொழியில் இப்பொழுது உண்டாகியிருக்கும் புத்துணர்ச்சி பல வகையாக உருப்பெற்று வெளியாகியிருக்கிறது. இளைஞர்கள், 'பழைய இலக்கிய இலக்கணங்களைப் பயின்று பரம்பரையாக வரும் மரபைக் கற்றுக்கொண்டு எழுதுவதென்றால் நாங்கள் கிழவர்களாகப் போய்விடுவோம்; எங்கள் வேகமும் தளர்ந்து போய்விடும். ஊக்கம் இருக்கும் போதே எங்கள் உணர்ச்சியை எழுத்திலே காட்டுவோம்' என்று புதிய மலர்ச்சியை உண்டாக்கினார்கள். முதலில் அவர்கள் முயற்சிக்கு ஓரளவு எதிர்ப்பு இருந்தாலும், தமிழில் எந்த விஷயத்தையும் எழுதுவது, படிப்பது என்ற வழக்கத்தைப் பொதுமக்களிடம் மிகுதியாக உண்டாக்கிய காரணத்தால் அந்த முயற்சியை நாளடைவில் யாவரும் வரவேற்கத் தொடங்கினர். அவர்களுடைய எழுத்துக்களுக்கு இடம் கொடுத்துத் தமிழர்கள் புத்தகம் படிக்கும் வழக்கத்தை அதிகப்படுத்தியதற்கு மூல காரணம் தமிழ்ப் பத்திரிகைகளே ஆகும்.

தமிழ்க் காதல் கொண்டுள்ளவர்கள் பல வகையாகப் பிரிந்து நிற்கிறார்கள். பரம்பரையாகத் தமிழ் இலக்கிய இலக்கணங்களைப் படித்துப் பாதுகாத்துவரும் பண்டிதர்கள் ஒரு வகை; ஆங்கிலம் படித்துப் பெற்ற அறிவைத் தமிழ்த் துறையிலே செலுத்தி இலக்கியங்களை ரஸிக்கும் ரஸிகர்கள் ஒரு வகை; சாஸ்திர ரீதியான ஆராய்ச்சியிலே திறம் பெற்றுத் தமிழ் நூல்களை அலசிப் பார்க்கும் முறையை மேற்கொள்வார் ஒரு வகை; எந்த விஷயத்தையும் தமிழில் எழுத வேண்டும் என்ற துடிப்புடன் நினைப்பதையும் பேசுவதையும் எழுதிக் குவிக்கும் இளைஞர்கள் ஒரு வகை - இவ்வளவு பேர்களுடைய நன் முயற்சிகளுக்கும் இடங்கொடுத்துத் தங்கள் தங்கள் துறையில் உழைக்கும்படி தூண்டிச் சேவை புரியும் வாய்ப்பு இக்காலத்துப் பத்திரிகைகளுக்கு உண்டு. ஒரு பத்திரிகையின் விசேஷ மலரை எடுத்துப் பாருங்கள். எத்தனை வகையான மனிதர்கள் எத்தனை வகையான கட்டுரைகளை எழுதியிருக்கிறார்கள்!

இப்படி வளர்ந்துவரும் தமிழுணர்ச்சி வரவர நல்ல பயனை உண்டாக்கி வருகிறது. ஆங்கில மோகம் நிறைந்திருந்த ஒரு காலத்தில் தமிழில் பேசுவதும் எழுதுவதும் அவமானமாகக் கருதப்பட்டுவந்தன. பாரதியார் அந்த எண்ணத்தைத்

தம் சொல்லம்புகளால் தாக்கி இருக்கிறார். அடுத்தபடி, 'தமிழில் எழுத முடியுமா?' என்ற சந்தேகம் கனவான்களுக்கு உண்டாயிற்று. 'தமிழில் எழுதினால் அழகாக இருக்குமா?' என்ற சந்தேகம் அடுத்தபடி தோன்றியது. இவ்வளவு படிகளையும் தாண்டி இப்பொழுது, 'தமிழர் தமிழில் எழுதுவதுதான் இயற்கையானது; அழகானது' என்ற எண்ணம் மேலோங்கி வருகிறது. இதற்கு வேறு சாட்சி வேண்டுவதில்லை; மகா கனம் சாஸ்திரிகளும் ஆங்கில மொழியில் மேதாவிகளாகிய வேறு சிலரும் தமிழில் எழுதிவரும் கட்டுரைகளே போதும்.

மகா கனம் சாஸ்திரியார் முதல் முதலில் தமிழில் எழுதிய போது தமிழ் நாட்டார் வியப்பில் மூழ்கினர்; சிலருக்குச் சந்தேகங்கூட ஏற்பட்டது, 'சாஸ்திரிகள் ஆங்கிலத்தில் எழுதி யாரோ தமிழ்ப்படுத்தியது' என்று எண்ணினார்கள். நல்ல வேளையாகச் சாஸ்திரியார் தமிழில் பல கட்டுரைகள் எழுதினார்கள். சுய சரிதக் குறிப்புகளையே எழுதினார்கள். பல நூலறிவும் உலக அநுபவமும் தமிழன்பும் உடைய அவர்களுடைய எழுத்தில் அழகு ததும்பி நிற்பது ஆச்சரியமா என்ன?

அவர்கள் எழுதிவந்த கட்டுரைகளைத் தொகுத்துப் புஸ்தகமாக வெளியிட வேண்டுமென்ற எங்கள் விருப்பத்தை அவர்களிடம் தெரிவித்தபோது, சிறிதும் தடையின்றி உடம்பட்டார்கள். அந்த அன்புக்காகக் கலைமகள் காரியாலயத்தார் மாத்திரமல்ல, இதனை வாசித்து இன்புறும் தமிழன்பர்களுங்கூட நன்றி பாராட்ட வேண்டும்.

இதில் உள்ள கட்டுரைகளில், 'எங்கள் ஊர்', 'சிரத்தைக்கு என்ன வேண்டும்?' என்ற இரண்டும் கலைமகளில் வெளி வந்தவை; 'மீண்டும் வாழ்ந்தால்...?' என்பது சுதேசமித்திரன் வாரப்பதிப்பிலும், 'பங்காளிக் காய்ச்சல்' கல்கி தீபாவளி மலரிலும், 'இன்றைப் பொழுது போக வேண்டுமே' ஆனந்த விகடனிலும், 'நம்ப ராமப்பா' ஆனந்த விகடன் தீபாவளி மலரிலும் வெளியானவை. இவற்றைத் தொகுத்துத் தந்தும், சாஸ்திரியாருடைய படத்தை உதவியும் இவ் வெளியீட்டில் ஊக்கம் காட்டிய நண்பரான, சுதேசமித்திரன் உதவியாசிரியர் ஸ்ரீ கே. சுந்தரராகவன் அவர்களுக்கு எங்கள் நன்றி உரியது.

ஜூன், 1944. —பதிப்பாளர்.

# மீண்டும் வாழ்ந்தால்?

'மீண்டும் வாழ்ந்தால்.....?' இந்த தலைப்பை அநுஸரித்து வியாஸம் எழுதினால் மனக் குதிரையை இஷ்டப்படி தட்டிவிடலாமா? 'ஆறடி உயரம் வேண்டும்; இங்கிலாந்தில் டியூக் வம்சத்தில் பிறக்க வேண்டும்; காளிதாஸன் போன்ற கவியாயிருக்க வேண்டும்' என்றெல்லாம் ஆசைகளை வெளியிடலாகாது. நாம் அறியாமல் நேர்ந்த பிறப்பையும் அதன் கால தேச வர்த்தமானங்களையும் மாற்றாமல், நமக்கு விவேகம் தோன்றிக் காரியங்களை விடவும் செய்யவும் சுதந்தரம் உண்டான பிறகு நடந்த நிகழ்ச்சிகளைத்தான் கவனிக்க முடியும். அவைகளுள் செய்ய வேண்டியதைச் செய்யாமலும், செய்ய வேண்டாததைச் செய்தும், என்ன என்ன அநுதாபங்களை அநுபவிக்கிறோம் என்பதையும், நேராகவே செய்த காரியங்களை நினைத்து என்ன என்ன திருப்திகளை அடைகிறோம் என்பதையும், உண்மையாக எழுதினால் படிக்கும் இளைஞருக்கு ஒருகால் சிறிது உபகாரம் ஆகலாம்.

நான் பி. ஏ. ஆனவுடன் சம்பாதிக்கத் தொடங்க வேண்டியதாய் இருந்தது குடும்பம் வறியது; பெரிதுங் கூட பி. எல் வகுப்பில் சேர்ந்து உடனே அதை விட வேண்டி வந்தது. ஸர்க்கார் வேலையிலோ பதினைந்து இருபது ரூபாய்க்குமேல் கிடைக்காது. மாயூரத்தில் ஐம்பது ரூபாய் சம்பளத்துடன் முனிஸிபல் பள்ளிக்கூடத்தில் உபாத்தியாயர் ஆனேன் அது எனக்கு மனத்திற்கும் பிடித்தது. பிள்ளைகளின் பேரன்பும் படிப்பில் அவாவும் எனக்குத் தக்க வெகுமதிகளாயின. இங்கிலீஷ் சொல்லி வைக்கும்படியான அவகாசம் கிடைத்தவுடன்

அப் பாஷையின் கடினமான உச்சரிப்பைக் கற்றுக் கொள்ள வேண்டுமென்று தீர்மானித்தேன். தகுந்த வித்துவான்களின் உதவி இல்லாததால் 'வெப்ஸ்டர் டிக்ஷனரி'தான் கதியென்று அதையே ஓழிந்த பொழு தெல்லாம் பார்த்துக்கொண் டிருப்பேன். அப்பொழுது பிடித்த அகராதிப் பைத்தியம் மேன்மேல் அதிகரித்து இன்னும் விட்டபாடு இல்லை. ஆனால் ஒரு நாளுமே பிள்ளைகளாவது சிநேகிதர்களாவது என்னிடம் இதைக் கற்கவேண்டுமென்று கவலை காட்டியதில்லை. எனக்கும் ஒருவரைக் கட்டாயப்படுத்திக் கேட்கும்படி செய்வ தற்கு வேண்டிய தைரியம் இல்லை. இவ்வளவு காலம் கழிந்த பிறகு, 'வீடு போ போ, காடு வா, வா' என்கிற பொழுது, 'ஐயோ, வீண் போகிறதே' என்று துக்கித்து என்ன? கூப்பிட்டும் தேடிப்போயும் சொல் லிப் பார்க்கிறேன் கேட்பார் இல்லை. 'இவருக்குத்தான் பைத்தியம்! நம்மையும் பைத்தியமாக்கப் பார்க்கிறாரே' என்பார் போலும்!

## இப்போதும் பெருமை

**நா**ன் உபாத்தியாயராக இருந்தபொழுது இப் பொழுதுபோலத்தான் பிள்ளைகள் 'நோட்ஸ், நோட்ஸ்' என்று அடித்துக்கொண்டார்கள். பாடமாக நியமித்த புஸ்தகங்களைப் படியாமல் சுருக்கங்களையும் வினா விடை களையும் உரு ஏற்றுவார்கள். ஜெனரல் இங்கிலீஷ் என்றும், இந்தியாக்கு உரிய 'கிராமர்' என்றும், 'ரீடர்' ரென்றும் போட்டுச் சொல்லிப் புஸ்தகத்தை அச்சிட்டுப் பிரசுரம் செய்பவர்கள் எனக்கு ஏராளமான பரிசளித்து எழுதச் சொல்லிப் பார்த்தார்கள். பணம் வேண்டு மென்கிற ஆசை இருந்தாலும் நான் அதற்கு இணங்கிய தில்லை. அத்தகைய புஸ்தகங்களால் திரவியம் சம்பாதிப் பது நற்படிப்புக்குக் கடும் துரோகம் என்பது என் கொள்கை. நல்ல வேலையாய ஒழுங்கு தவறாமல்

நின்றேமே என்று இப்பொழுது நினைக்கையில் பெருமையா யிருக்கிறது.

மற்றும் ஒரு பெருமையையும் கூறிக்கொள்ளத் துணிகிறேன். உபாத்தியாயர் தொழிலென்ற இழிவான நிலையை மாற்றவேண்டுமென்று என்னால் முடிந்த வரையில் நடத்தையாலும் வேறு வகையாலும் முயன்றேன். முரட்டுத்தனம் செய்யாவிடினும் நமக்கு என்ன என்று ஒதுங்கி ஓடுவதில்லை. காங்கிரஸ் இயக்கம் முதலான ராஜாங்கக் கிளர்ச்சிகளில் கலப்பதுண்டு. ஒரு சமயம் சென்னைத் துரைத்தனத்தார், மானேஜர்களும் உபாத்தியாயர்களும் சர்க்காருக்கு விரோதமான பொதுக் காரியங்களில் தலையிடக்கூடாது என்று உத்தரவு போடுவதற்கு ஏற்பாடு செய்தார்கள். டாக்டர் மில்லர் தலைமையில் பெரிதும் போராடி அந்த ஏற்பாடு தடைப்பட்டது. அந்த வித்தியா வீரனின் தலைமையின் கீழ்ப் படைஞர்களாய் நின்றவரில் நானும் ஒருவன்.

இரண்டு வருஷத்திற்கு முன்னர், காங்கிரஸ் கவர்ன்மெண்டார் அதுபோன்ற உத்தரவைப் பிறப்பித்தார்கள். எல்லா உபாத்தியாயர்களையுந்தான் பிடித்தது. ராஜ்ய சுதந்தரம் பெற வேண்டும் என்று சிறை முதலிய கடுந் துன்பங்களை ஏற்றுக்கொள்பவர், தமக்கு அதிகாரம் கிடைத்தபோது பள்ளிக்கூடங்களில் அகப்பட்டுக் கொண்டு சிறுமைப் படுவோர்களை ஆதரியாமல், இருக்கும் உரிமையையுங்கூடப் பிடுங்கிக்கொள்வது தர்மமல்லவென்று ஒரு கிளர்ச்சியைத் துவக்கினேன். உபாத்தியாயர் தொழிலில் இருந்தவர்கள் செய்த் பிரயத்தனம் கொஞ்சமேனும் போதாதென்று தோன்றிற்று. பள்ளிக்கூடங்களும், படிக்கும் பிள்ளைகளும் மிகவும் அதிகரித்திருந்தாலும், முன்னிலும் கேடானதும் தாழ்ந்ததுமான நிலையில் இருக்கிறார்களென்பது வெளியாயிற்று. இந்த முன்னேற்றத்திற்குப் பிரதிகூலமான சட்டத்தை நிகழும் அட்வைஸரி கவர்ன்மெண்

டார் சற்றுத் தளர்த்தி யிருக்கிறார்கள். இது ஏதோ ஒரு விஷயத்தில் திருப்திதான். ஆனால் நம்முடைய ஜனங்களே அதிகாரம் வகிக்கும்பொழுது இதைச் செய்யவில்லை என்பது பெரும் விசனம்.

## சட்ட ஞானம்

நான் உபாத்தியாயராயிருந்த காலத்தில் ஒரு குறை உண்டு. மூன்று வருஷ காலம் லா காலேஜில் படித்தேன் படித்தேனென்ற பேரே ஒழிய, ஒரு 'லா' புஸ்தகத்தைக்கூடத் திறந்து பார்த்ததில்லை. வக்கீலாகப் போகாவிடினும் 'லா'வை ஒருவாறு சாங்கோபாங்கமாயப் படித்திருந்தால், நான் பிறகு புகுந்த பொதுக் காரியங்களுக்கு மெத்தப் பிரயோஜனமாக இருந்திருக்கும் ராஜ்ய நீதிகள், முறைகள், வழக்குகள், சட்ட நிர்மாணம், சுதந்தரம் அடையும் வழிகள் இவை யெல்லாம் சட்ட ஞானம் உள்ளவருக்கு எளிதில் வரும். இந்த அபிப்பிராயத்தை அநேகர் மறுப்பர். எனக்குக் குருவான கோகலே தமக்குச் சட்டப் பயிற்சி இல்லையே என்று அடிக்கடி வருந்தினது உண்டு நானும் அதைப் பெருங் குறையாகவே நினைக்கிறேன். என்னை லாயரென்று பிரமித்தவர் உண்டு. தெளிவாயும் கோவையாயும் மனத்தில் பதியும்படியாயும் யாராகிலும் பேசினால், அவர் லாயராகத்தான் இருக்க வேண்டுமென்று பெரும் பாலோர் கருதுகிறார்கள். மற்றத் தொழில் முறைகளில் பேச்சு அப்பியாசம் மட்டுந்தானே? அரசியல் சாஸ்திரம், பொருள் நூல், ஜூரிஸ்ப்ரூடென்ஸ், சுதந்தர சரித்திரம் முதலியவைகளைக் காலேஜில் படித்தவர்கள் 'ராஜ்ய நீதி' என்பதை எளிதில் அறிந்துகொள்ள முடியும்.

## பெரிய பிசகு

எனக்கு இன்னமும் நினைக்கும்பொழுதெல்லாம் தாங்க முடியாத பச்சாத்தாபத்தை உண்டு பண்ணுகிற

பெரிய தவறுதல ஒன்று உணடு அந்தக கடமையைச செயயாமல ஒதுஙகியது கொடிய குற்றமெனறே எணணி வருநதுகினறேன. அதை விவரிதது வெளியாககினால எனககு மனம சற்று ஆறுதல அடையும். ஏதோ ஒரு பிராயசசிததம் போலும் ஆகும. படிபபோர தயை செயது உததரம் கொடுகக வேணடிககொளகிறேன.

திருவலலிககேணி ஹிநது ஹைஸகூலில நான வேலையாயிருந்த காலததில என தகபபனார திடீரென்று காலமானார வைதிகத தொழிலாதலால மிகக ஆசாரமாயும் ஒழுககமாயும் இருநதவர; குடும்பததில முனனோர தவறாத சம்பிரதாயததை அநுசரிததுத தாமும் சநநியாஸம் செயதுகொளள வேணடுமென்று ஏறபாடு செயதுகொண டிருநதார. அநத ஆசை நிறைவேறாமல ஒரு நாள சாயநதரததில வியாதி ஒன்றும் தோனறாமலே மாரவலி உணடாகி ஒரு மணிககுள என்மீது சாயநது பேசிககொணடே காலஞ சென்றார. நான அபபொழுதே நம பழைய வழககஙகளை விடடு மதாசாரஙகளில சிரததையினறி இருந்தேன ஆயினும் என் அபிபபிராயஙகளை ஒரு பககம் கடடி வைததுவிடடு அவருடைய உததரக கிரியைகளை ஊரார புகழச செயதேன்.

என் தாயககும் இவவாறே ஒழுஙகு தவறாது இறுதிக கடமையைச செலுததிக கரையேறறுவேன் என்று அவள பூரண நமபிககையுடன் இருநதாள. எனககும் அதே தீரமானநதான ஆனால வேறுவிதமாக முடிநதது. புனா இந்திய ஊழியர சஙகததில, 1907-ஆம் வருஷம் ஜனவரி மாதம சேரநதேன அது முதல அநேகமாக ஒவவொரு வருஷமும் கோகலே எனனை இஙகிலாந்துக்குப போயக் கொஞ்சம் சுற்றிப் பாரதது வரவேணடுமென்று வறபுறுததிககொணடே இருநதார. எனககும் அஙகே போவதில தீவிரமான ஆசையிருந்தாலும் மாதரு கிருததியததை முடிககாமல தேசததை விடடுப்

போவது பெரும துரோகமென்று பயந்து தஙகி விட்டேன். நாலைந்து மாதந்தானே என்றால, 'கப்பல யாத்திரை செய்தவன் கையால போட்ட கொளளி என்ன உபயோகம்?' என்று சொலலி ஏஙகுவாள அவ்வளவு உறுதியுடன இருநதவன், 1919-ஆம் வருஷததில இந்திய அரசாஙகத திருததஙகள சம்பந்தமாக மாணடேகுவின் பிரேரணைகளைப பறறிப பாலிமென்ட கமிட்டியார இநதியாகளைச சாட்சிகளாக விசாரிககப போகிறாாகள என்றதும், அநத விஷயததிலிருந்த அககறையால நானும போவது அவசியமென்று நிசசயம் செயதுகொணடு சீமைககுப போனேன. எணபது வயசாகித தளளாமையுடன இருநத என் தாய ஒரு மாதததிறகுள உயிரைத துறநதாள எததனையோ தவம பணணிப பிறநத மூதத மகன கைவிட்டானே என்ற துககம் அவள முடிவுககுக் கொஞ்சமாயினும காரணமாக இருநதிருகக வேணடும் இபபொழுதும அதை நினைததால மஹாபாதகம் செயதோமே என்கிற விசனம் தாஙகமுடியாமல வேதனை செயகிறது. சாட்சி சொலலியதால என்ன பெரிய தேசோபகாரம செயதோம! காததுக காததுக கடைசியில, 'பெறற தாயககு உதவாமற் போனது பிசகுதான' என்று இபபொழுது தோன்றுகிறது.

## ராஜீயப் பிரபஞ்சம்

மூபபததேழாம் வயசில பளளிக்கூட ஆசிரியா வேலையை விட்டுப புனாவில கோகலே ஸதாபிதத இந்திய ஊழியா சஙகததில சோந்தேன். பந்துக்கள, நணபாகள எலலோரும கூடாதென்று தடுததாாகள. அந்த மாறறம நனமையாக முடிந்ததா? தீமையாகக் முடிந்ததா? முப்பதது நானகு வருஷததிய அநுபவததையெலலாம், ரூபாயைப் பூமியில தட்டிச செலலுமா செலலாதா என்று தீாமானிப்பதுபோல்

தீர்மானிக்க முடியுமா? சில காரணங்களுக்காக இப்படியும், சில காரணங்களுக்காக அப்படியும் சொல்ல வேண்டும்போல இருக்கிறது. எனக்கே பெருத்த சந்தேகந்தான்! நல்ல உபாத்தியாயர் என்று பேர் வாங்கி எவ்வளவோ பிள்ளைகளின் பிரீதியை அடைந்து கற்ற வித்தையை வஞ்சனையின்றிப் பிரசாரம் செய்வதைக் காட்டிலும் நம் ஆத்மாவுக்கு மேன்மையான நலம் என்ன? தேசத்திற்குத்தான் உயர்வான சேவை என்ன? உபாத்தியாயராகவே இருந்தால் இவ்வளவு மார்க்கா, இவ்வளவு பரீக்ஷை, இவ்வளவு 'பாஸ்'கள், இவ்வளவு பாடம் சொல்லிக் கொடுத்தது, இவ்வளவு பேருக்கு உத்தியோகம் என்று கணக்கிட்டுத் திருப்தி யடையலாம். இந்த அரசியற் பிரபஞ்சத்திலோ, பேசியது, தீர்மானப் பிரேரணை பண்ணியது, வோட் கொடுத்தது, மகாநாடுகளில் யுக்தி சொல்லியது, அதிகாரிகளிடம் ரகசியமாயும் பகிரங்கமாயும் தேச லாபத்தைப் பேரம் செய்தது, இவற்றையெல்லாம் எந்தத் தராசில் நிறுக்கிறது? விலை எப்படி மதிக்கிறது? லாப நஷ்டம் எவ்வகையில் தீர்க்கிறது! என் கோழை மனத்திற்கு இவை பெரிதும் கெடுதலாயத்தான் படுகின்றன.

பொதுவாக என்னுடைய வியாபாரங்களால் தேசத்திற்குக் கேடு நேர்ந்திருக்குமென்று மனம் பயந்து கொந்தளிக்கிறது. நானே பிடித்தடித்து அகப்பட்டதையெல்லாம் மேலே தூக்கிப் போட்டுக்கொண்டு, எப்படியாகிலும் முன்னே நிற்கவேண்டுமென்கிற பேராசை பிடித்தவனல்ல. தீராதென்றால்தான் செய்வது வழக்கம். மற்றவர் எனக்கு உனக்கென்று எடுத்துக் கொண்டவை போக, பாக்கி நின்றதைத்தான் அநேகமாக ஏற்றுக்கொள்வேன். எந்த வேலையையும் கூப்பிட்டுக் கொடுத்தால்தான் தொடுவேன். அவ்வளவு மனத்திடம் அற்றவன். நல்லது செய்ய வேண்டும்

என்ற அவாவைக் காட்டிலும் நம்மால் கெடுதல் நேராமல் இருக்க வேண்டுமே என்கிற கவலைதான் அதிகம். நல்லோர் நம்மை மெச்சாமற் போனாலும் நிந்தியாமல் இருந்தால் பரம க்ஷேமம் என்பதே என் உறுதியான கொள்கை. இதை நன்கு அறிந்துதான் பெரும் காரியங்களை நான் ஒருவனாக நின்று ஏற்றுக் கொண்டதில்லை. முன் நின்று தலைமை வகித்து நடத்த முடியாதவன் என்ற பேர் வாங்கினேன். பலமுறை அவகாசம் கிடைத்தும் தலைமை வேண்டாமென்று மறுத்திருக்கிறேன். இவ்விஷயத்தில் நான் துக்கிக்க வேண்டியதே இல்லை.

## என் ஸ்வபாவம்

இதை ஒட்டிய வேறொரு தோஷமும் உண்டு. பத்திரிகைகளிலாவது, பேச்சிலாவது யாராகிலும் என்னை நிந்தித்தால் உடனே போரில் கலந்து பதில் சொல்வது, எழுதுவது என்ற வழக்கம் என்பால் இல்லை. ஏதாகிலும் தவறுதலாய்ச் சொல்லியிருந்தால் அதை மட்டும் சரியாகத் திருத்துவேன். வெகுகாலம் இதனால் மிகவும் துயரப்பட்டிருக்கிறேன். சில காலத்துக்கு முந்தி சில வருஷங்களுக்குள் ஒரு நிகரற்ற தேசாபிமானி ஒரு புஸ்தகம் எழுதினார். அது லக்ஷக் கணக்கான பிரதிகள் வெளியாகியது. அதைப் படியாதவர் குறைவு. அதில் என்னை விஸ்தாரமாகக் கண்டித்துக் கேவலமான அவமதிப்பிற்கு உள்ளாக்கியிருக்கிறார். வெகு நேயர்களுக்கு இது அநியாயமென்று தோன்றி என்னைப் பதில் எழுதும்படி தூண்டினார்கள். எனக்கு வேண்டாம் என்றே தோன்றுகிறது. நமக்குப் பின்னால் உதிக்கும் சிறுவர்களுங்கூட அந்தப் புஸ்தகத்தைப் படித்து 'சீ' யென்று துப்புவார்களே என்று ஒரு வேளை அச்சமுண்டாயினும் நமக்கு விமோசனம் இல்லை என்றே பொறுத்திருக்கிறேன். புகழ்ச்சி, இகழ்ச்சி இரண்டையும் ஒன்றாகப் பாவிக்கவேண்டும் என்ற கீதையின்

உபதேசத்தை ஒட்டியதல்ல இந்த எண்ணம்! அதில் அளவற்ற நம்பிக்கையும் ஆசையும் உண்டுதான் ஆனால் அந்த உயர்நிலை எங்கே, நான் எங்கே! நான் தவறிய தாக எழுதுவதைப் படிப்பவர் எண்ணிக்கை குறைவு. அவர்களுள் நான் சொல்வதை நம்பி மன்னிப்பவர் பின்னும் குறைவு. அரசியல் என்கிற உலக வியாபாரத் தில் புகுந்த பிறகு வெட்கம், ஸமரணம் என்பது கூரமையாயிருத்தல் கூடாது. மனம் செருப்புத்தோல் போன்றதாக வேண்டும். இல்லாவிடில் நரகந்தான்.

1923-ஆம் வருஷத்தில் நான் ஒரு சமயம் மூன்று ஜன்மத்தில் அநுபவிக்க வேண்டிய துன்பத்தை அநுப வித்தேன். ஆஸ்திரேலியா முதலிய குடியேற்ற நாடுக ளில் சஞ்சாரம் செய்து திரும்பி வந்ததும், பிராணனுக் குப் பிராணனை பந்துக்களும் சிநேகிதர்களும் ஒருங்கு கூடி நான் அங்கெல்லாம் பேசினதும் செய்த தும் தேசத் துரோகமென்றும் மானக் கேடென்றும் இழிவாகத் திட்டித் தாங்களும் அழுது என்னையும் அழச் செய்தார்கள் அந்தச் சம்பவத்தை நினைக்கிற பொழுதெல்லாம் என் வயிற்றைக் கலக்குகிறது என் பேரில் குற்றம் இல்லை என்று திடமாய்ச் சொல்வேன். என்ன செய்கிறது? களவு செய்யாவிடினும் பதின் மடங்கு சிக்ஷை கிடைத்துவிட்டது. இந்த அவதூறுக் கும் இதுவரையில் நான் சமாதானம் சொன்னவனல்ல. மனம் அறியத் தூஷித்தவர் பேரில் எனக்குத் துவேஷ மும் இல்லை. ('Love thine enemies') 'விரோதிகளிட மும் அன்பு காட்டு' என்கிற அளவு எட்டாவிடினும் எதிரிகளுக்கு நான் கேடு விரும்புவதில்லை.

## ஸாமோபாயம்

'வணக்கம் வெல்லும்' என்பதை நான் பல முறை அநுபவத்தில் கண்டிருக்கிறேன். இளமை முதலே கோபம், பொறுமை போன்ற தூர்க்குணங்களை வெளிக்

காடடாமல அழுததியவன நான். தென் ஆப்பிரிக்கா வுககு ஏஜணடாக அலுவல பாாக்கப போயிருந்த பொழுது தொடககததில சிறிது காலம் வெள்ளையா களிடம் அவமானமே கிடைததது. அதையெலலாம் பொறுததுக காலககிரமததில நான மதிககத் தககவ 'னென்று அவாகள மனததில அநுகூல புததியை உணடு பணணினேன.

இமமாதிரி அநுபவம் வெள்ளையரிடமிருந்து மடடு மலல; நம் ஜனஙகளிடமிருநதும் பெறறதுணடு வெளி நாடடில குடியேறியிருககும் இநதியாகளுககு மிதவாதிக ளிடம மதிபபு மிகவும் குன்றியது. இது போதாதென்று ஸாககாா ஆஸாமி எனறு நெற்றியில முததிரை போட டுககொணடும போனேனு! கேடபானேன! கானடாவில வானகூவா எனகிற படடணததில பஞசாபைச சோந்த சீககியா பெருமபாலோா முரடடுப போவழிகள். நான் ரெயிலை விடடு இறஙகும்பொழுது தாஙகள ஒருவா கூட வராமல ஒரு வெள்ளைப பாதிரியை மடடும் அனுபபி, 'இஙகே இடஙகொடோம் தஙகாமல அபபடியே போகலாம்' என்ற செயதியைச சொல லும்படி செயதாாகள என்னுடன் இருந்த ஸெகரெடரி பாஜபை (இபபொழுது அவா ஸா கிரிஜா பாஜபை) "இதெனன சஙகடம்? போய விடலாமே" எனறுா நான ஸாமம் எனகிற மருநதைப பிரயோகம் செயது பாாபபோமெனறு அவவிடம் இரணடு நாள தஙகி முககியஸதாகளைத தனிததனியே பாாதது வசபபடுத தினேன். பிறகு அவாகள குருததுவாரததில கூடடங கூடிப் பிரசங்கததைத மரியாதையாயக கேடடு எனனு டன உறவாடி என் வேலையை அதாவது தஙகள வேலை யைததான் சரிவர முடிநதுககொணடாாகள இதற்குச் சில ஆணடுகளுககுப் பிறகு கீனியாவில நம் ஜனஙகள் என்னைக கணணுறறுப பாாகக மாடடோமெனறு ஒரே பிடிவாதம் பிடிததாாகள. அஙகும் மிதவாதி, சாககாா உததியோகஸதன எனபதுதான் நான் செயத பாவம்.

நான் போகும் முன்னமே பத்திரிகையில் நன்றாய்த் திட்டி இவரைச் சற்றும் கவனியாது திருப்பி யடிக்க வேண்டுமென்று கங்கணம் கட்டிக்கொண் டிருந்தார்கள். வெள்ளையர்களும் ஏறக்குறைய அப்படித்தான். அப் பொழுதும் பணிந்து நயந்துதான் முடிவில் இரு திறத் தாரின் உதவியையும் பெற்று உத்தேசத்தைச் சாதித்தேன்.

## இப்போது நினைத்தாலும்...

**ஆ**னால் எப்பொழுதுமே தணிந்து போனேன் என்பதில்லை. முரணின சமயங்களும் உண்டு. சில சமயம் நான் செய்தது பிழையென்று பின்னர் வருத்தப்பட் டிருக்கிறேன். இப்போதும் அச் செயல்களை நினைத்தால் ஏன் அவ்வளவு புத்தி கெட்டுப் போயிற்று என்று துக்கமாயும் வெட்கமாயும் இருக்கிறது. 1922-ஆம் வருஷத்தில் டொமினியன் பிரயாணத்திற்கு முன் லார்ட் ரெடிங் ஸிம்லாவில் எனக்காக ஒரு பெரிய விருந்தளித் தார். மேன்மையான சபை; வைஸ்ராய் மிக்க உசித மாயும் என் காரியத்திற்கு அநுகூலமாயும் பேசினார். இதற்கு உத்தரம் கொடுக்குங்கால், சமயம், சந்தர்ப்பம், உத்தேசம் எல்லாவற்றையும் ஒரு பக்கத்தில் ஒதுக்கி, ஏதோ இந்த அரசாங்கத்தைத் தாழ்த்தியும், உயர்ந்த பிரிட்டிஷ் உத்தியோகஸ்தர்கள் இந்தியர்களுடைய விசுவாசத்தை முற்றும் இழந்து விட்டார்களென்று விசனித்தும் பேசினேன். சபையோருக்கு அதிருப்தி உண்டாயிற்று. எனக்கும் ‘பார்ப்பான் புத்தி பின் புத்தி’ என்றாற்போல், பேச்சு முடிந்ததும் என்ன செய்தோம் என்ற பச்சாத்தாபம் மேலிட்டது. வைஸ்ராய் மறுநாள் வெகு நாசுக்காய், “மனத் தில் எந்த ராஜாங்க முறைத் தவறுதலை நினைத்து அவ்விதம் பேசினீர்கள்?” என்று கேட்டார். ஏதோ தென்பாய்ச் சொல்லி வெளிவந்தேனே ஒழிய மனத்திற்

குச சமாதானமே இலலே ஆாதா மூா புதிதாய் வந்தி ருந்தாா. அவா மடடும், "அந்த விஷயம் சொலல வேணடியதுதான். நீா சொலலாமல யாா சொலவாா? இச்சமயததை விடடால வேறெபபோது இததகைய சமயம் கிடைககும்?" என்றெல்லாம் சிலாகிததே விவ கரிததாா. ஆயினும் எனககுமடடும் அது தகாதநடததை எனறே தோனறுகிறது. கொஞ்ச காலததிறகுப் பிறகு ஸா மாலகம ஹேயலி டெலலியை விடடுப பெரிய வேலேககுப போனாா. விடை கொடுப்பதறகாக ஒரு விருநது ஏறபடடது. என்னே அககிராசனம் வகிகக நியமிததாாகள. அபபொழுதும எனககு ஏதோ நாககில சனி பொலலாததனம் செயதான். ஷிவில ஸாவிஸகாராகளே வேடிககையாகக கடிநது தூஷிததேன. பேசும்பொழுதே, 'பிசகுதான் பண்ணுகிறேம்; ஆனல இந்தச சமயம் வாயததை விடககூடாது' எனறு ஏதோ அக காலததில அநத ஸாவிஸ பேரில இருந்த கோபததைப போககிககொணடேன. அவாகள ஒனறும காடடிககொளளவிலலே. ஆனல என் நெஞசம் குற்றமுள்ளதாதலால குறுகுறுவென்றே தவிததுககொண டிருந்தது.

## கீனியாக் கேடு

சாதாரணமாயக கோபமிலலாதவருககுக் கோபம் வந்தால ஒரு சமயம் ரௌததிராகாரந்தான். கீனியாவில குடியேறியிருககும் நம் ஜனஙகளின கக்ஷியை எடுதது வாதிபபதற்காக இந்திய சடடசபை இந்தியாகளாகச சோநது, தஙகள பிரதிநிதிகளாக, பி எஸ. காமத, ஜமனதாஸ தவாரகாதாஸ, நான ஆகிய மூவரையும இஙகிலாநதுககு அனுபபினாாகள. அபபொழுது பாலட வின் முதன மந்திரி; டயூக ஆப டெவன்ஷையா கலோனியல மந்திரி ஆனல அவா விசேஷமாய ஒனறி லும் தலையிடடுக கொளளவிலலே. எலலாம் அவா காரிய

தரிசி ஸா ஜேம்ஸ் மாஸ்டாடன் ஸ்மித என்பவா தாம கடததிவந்தாா. இந்தியா ஆபீஸில லாாட பீல காரியதரிசி ஏால வின்டாடன் உதவிக காரியதரிசி. இவவிருவரும் முதலில நம் கக்ஷியா யிருநதவாகள கொஞசம் கொஞ்சமாய அந்தக கினியா வெளளையா கக்ஷியை ஒட்டிப பேசத தொடஙகினா. இவாகளோ ஆயுதஙகள சோத்து 'டரில' முதலானதெலலாம் பழககிக கொணடு இந்தியா சாாபாகத தீாபபாருமானால போராடுவோமே தவிரக கீழ்பபடிய மாட்டோமெனறு முரட்டுததனம் பணணினாாகள. மேலும் தஙகள ஸ்திரீகளுககும் மககளுககும் கேடு நேரிடும் எனறு பாாலிமெனடு அஙகததினாகளின ஸதிரீகளுககுப் பயததை உணடாககி அஙகததினாகளை யெலலாம் குழம்பும்படி அடிததுவிட்டாாகள. நாஙகள மூவரும் கினியாவிலிருநது வநத இநதியாகளும ஆதரவறறவாகளாய அஙகும் இஙகும ஓடி அலைநதோம்.

அப்பொழுததான், நம் பணததைப போட்டுக கட்டி ஒரு பெரிய ஆபீஸை வைததும அதில அளவு இலலாமல சம்பளஙகள கொடுததுப பெரிய பெரிய உததியோகஸதாகளை நியமிததும் இவாகள, கஷ்டததை வநதபொழுது நம்மைப பறககவிடுகிறாாகளே எனகிற துககம் மனததைப புணணாககிறது. நாஙகள பட்ட வருததததையும் சிறிய தனததையும இபபொழுது நினைததாலும் தாஙகவிலலை. எஙகள கோரிக்கையை ஏற்றுககொளளாமல கவானமெனடாா முடிவான உததரவு போட்டுவிட்டாாகள. ஸா ஜேம்ஸ மாஸ்டாடன் ஸமித வெகு திறமை வாயநதவா. எனனிடததில அந்தரஙகமாக, "உஙகள கக்ஷி நியாயமாயிருந்தாலும் மநதிரிமாா சபையில ஏறாது. இந்தியா டொமினியன் ஆனலதான் அநத மந்திரி சிபாாசுகள மற்ற மந்திரி சிபாாசுகளுககுச சமமாகும" என்று சொன்னா நாஙகள தததளிப்பதைக கணடு ஸா ஆலி இமாம் ஒரு பேருதவி புரிந்தா அவா ஹைதராபாத்

நிஜாமுககுப் போரா திரும்பவும் கிடைகக வேணடும் என்பதறகாக முயறசி செயதுகொண டிருந்தாா. அவருககும் காரியம் கைகூடாமல இடையூறுகள நோநதன. எஙகளுககு ஒரு பெரிய தேநீா விருநது வைதது அநேக வெளளையாகளையும் இநதியாகளையும் அழைததாா. பெருமை பெறற ஸதிரீகளும் புருஷா களும் கூடினாாகள. நான் ஒரு நாளும் இலலாதபடி எஙகள துககஙகளை யெலலாம் வாயால தற்சமயம் சொன்னால முறறும் சரி வராது என்று பயந்து ஒரு வியாசததில அமைதது, காகிதததில எழுதியே படிதது விடடேன ஒரு க்ஷணததில பொலலாதவனானேன. சிநேகிதர் பலா கோபஙகொணடு கைவிடடாாகள. பாலடவின கவான்மெனடாருககு வெகு ஆததிரம. அபபொழுதுதான விண்டாடன் துரை என்னைப பாாகக மாடடேனென்று நிராகரிததாா. திரும்பி இந்தியாவுககு வந்த பிறகுகூட எனககுக கோபம் தெளியாமல கொடிய சொற்கள அமைந்த அறிககை வெளியிடடேன்; பல இடஙகளில பேசினேன இப பொழுதுஙகூட எனககு அந்தப புண ஆறவிலலை. ஆகையால இநதக கினியா கிளாச்சியில என் வழககத திறகு மீறிக கடுமை காடடியும் கொஞசமேனும் பசசாத தாபமே இலலை. இந்தக கினியா அநியாயம் பொறுககக முடியாமல லாாட ரெடிஙகூட ஒரு வாாததை ஒழுஙகு தபபிச சொனனாரென்று லாாட பீல கையால ஒரு குடடுபபடடாா.

## மிதவாதக் கட்சி

**1918**-ஆம் ஆணடில இந்திய அரசியல உலகததில பெரிய கலக்கம் வந்து அலலோலகலலோலப்படடது மாணடேகு செம்ஸபோாட சேர்ந்து சில பிரேரணை களை, நம அரசாடசி முறையைத திருததுவதறகாக வெளியிடடாாகள. அவை நம்முடைய தலைவாகளுள

சிலருக்குப் பிடித்தன; சிலருக்குப் பிடிக்கவில்லை. வாதம் முதிர்ந்தது. கக்ஷிகள் பிரிந்தன. காங்கிரஸ் துண்டு பட்டது. ஸ்ரீமதி பெஸண்ட், பண்டித மாளவியா முதலியோர் காங்கிரஸில் சேர்ந்து மாண்டேகுவின் உத்தேசங்கள் போதாவெனத் தீர்மானித்து விடுவார்களென்று தோன்றியது. டின்ஷா வாச்சா, ஸுரேந்திர நாத் பானர்ஜி முதலியோர் தேசத்துக்குப் பெருங் கேடு வரும் என்று பயந்து காங்கிரஸை விட்டுப் பிரிந்து புதுக் கக்ஷியொன்றை, மிதவாதிகளென்று பெயர் வைத்துக்கொண்டு பம்பாயில் கூட்டுவதாக நிச்சயித்தார்கள். அப்பொழுது நான் இந்திய ஊழியர் சங்கத்தின் தலைவனாக இருந்தேன். சங்கத்தாரை எந்தப் பக்கத்தில் அழைத்துச் செல்லுகிறது? நானோ மாண்டேகுவுடன் நெருங்கிப் பழகி அவர் பிரேரணைகளை அங்கீகரிக்க வேண்டும் என்று ஊரில் விவகரித்துக் கொண்டிருந்தேன். காங்கிரஸைத் துண்டிப்பதில் பிரீதியில்லாதது மட்டும் இல்லை. அது கடும் பாவம் என்றுகூட எண்ணினேன். அதனால் ஏற்பட்ட தர்ம சங்கடம் இவ்வளவென்று வர்ணிப்பது அசாத்தியம்! என்ன செய்வது என்று சங்கத்தின் நண்பர் அனைவருக்கும் தத்தம் அபிப்பிராயத்தைத் தெரிவிக்க வேண்டுமென வேண்டுகோள் ஒன்று அனுப்பினேன். வந்த விடைகளையெல்லாம் கவனித்துப் பன்முறை யோசனை செய்து மிதவாதக் கக்ஷியில் சேர்ந்தோம். பம்பாய்க் கூட்டத்துக்குத் தேவையான உதவியும் செய்தோம். இப்படித் தீர்மானித்தது சரிதானென்பதே இப்போதும் உள்ள என் உறுதியான நம்பிக்கை. ஆனால், நான் காங்கிரஸ் சபைக்குப் பிறகுங்கூட இரண்டு தடவை போனேன். பிரயோஜனப்படவில்லை. மிதவாதத் தலைவருக்கு என் மேல் சந்தேகம் உண்டாயிற்றே தவிர, காங்கிரஸ் உறவு முன்போல் நிற்கவில்லை. அதி சீக்கிரத்தில் அந்தச் சபை, பழைய வழிகளை விட்டகன்றது. எனக்கு அதன் சம்பந்தம் அநுசிதமென்று தெரிந்தது.

கோகலே இருநதால காஙகிரஸ் இவவாறு மூாடடு மாாககததில சென றிரா'து என்றும் அவவாறு செனறு லும அவா அதை விடடு விலகியிருககமாடடாரென்றும் சொலவாா உணடு. இறநதவரைபபற்றி அபிப்பிராயம வேறுபடுவது வழககநதான. இஙகு விஸ்தரிபபது நோமையலல எனககு எளளளவேனும் இநத விஷயத் தில அநுதாபமே இலலை.

## குற்றச் சாட்டு

இந்திய சாககாருடைய பிரதிநிதியாகவும், தூத னாகவும தெனனாபபிரிககாவில அதன ஏஜணடாகவும் சிறசில சமயஙகளில நான் உழைததேனென்று என் மேல அநேக நணபா குற்றம சாறறுகிறாாகள். இவா களில முதனமையானவா காலஞ்சென்ற சாாலி ஆணடரூஸ, ஒரு தடவை தெனனாபபிரிககாவிலும ஒரு தடவை இஙகிலாநதிலும் எனனுடன் வாதாடி ஏதோ நல வழியை விடடு வழுவினவனைச சிக்ஷிபபதுபோல விம்மி விமமி அழுது என்னையும் கணணீா விடும்படி அடிததாா நேயாகள இந்தத தகராறைச சற்று ஊனறிப பாாககவேணடும். ஆணடரூஸைபபோல, இநதியா இருககுமிடம் யாவற்றையும் சுறறிப பாாதது அவாகள சுக துககஙகளை ஆதியோடந்தமாக அறிநதவா வேறு யாரும் இலலை. இநதியாவில வைஸ்ராய முதலான அதிகாரிகளையும, சீமையில மநதிரிகள ஆாச பிஷப போனற பெரியோாகளையும, மறறத தேசஙகளில் அந்த அநத ஊாத துரைததனததாாகளையும் கிணடிக கிணடிப பேசி யிருககிறாா சீனியாவுககும் தெனனாப் பிரிகாவுககும நாலைந்து தடவை போயிருககிறாா மற்ற இடஙகளை இரணடு முறையாவது பாாததிருப்பாா. வெளளையா யாராகிலும் கறுபபு நிறமுளளவா சாா பாகப பாடுபடடால பரம தயாளு என்கிற கியாதி உணடு. ஒவவோரிடததில் அவமானமும் கிடைககும்.

அதிலும் பாதிரியா யிருந்தவர் ஆகையால், தெய்வ பக்தி உள்ளோரிடம் விசேஷச சலுகை உடையவர்; நல்லவர்; ஏழைமையை வேண்டுமென்றே ஏற்றுக் கொண்டவர்.

அதிகாரிகள் அவருடன் சமபாஷித்தால் அநேக சமாசாரங்களை எளிதில் தெரிந்துகொள்ளலாம். வெளிப்படையாய்ப் பேசுவார். பத்திரிகைகளிலும் எழுதுவார். நாரதரைப்போல் அவருக்கும் எங்கும் தடையில்லாமல் பிரவேசம் உண்டு; ஆனால் கலகம் செய்வதில்லை கூடிய வரையில் விரோதிகளைக் கூட்டி வைப்பார் ஆனாலும் அவருடன் லோகாபிராமமாய்ப் பொதுப் பேச்சுக்களைப் பேசலாமே யொழிய, நெருங்கிப் பிடித்துத் தஸ்தாவேஜுகளைப் பெற்றுக் கொடுத்தும், ஒரு கவானமென்டாரை மற்றொரு கவான்மென்டாருடன் விவகாரம் கலக்கும்படியாகச் செய்ய முடியாது. நிபந்தனைகள் ஏற்படுத்திக்கொள்ளவாவது, வட்ட மேஜையில் உடகாராத அபிப்பிராயங்களை அதிகார வாக்கத்தினரிடம் அறிவிக்கவாவது முடியாது. நல்லது, பொல்லாதது என்பதைக் காட்டி ஜனங்களுடைய எண்ணங்களை ஒரு பக்கம் திருப்பி, அநுகூலமோ பிரதிகூலமோ பண்ணி வைக்கலாம்.

நாங்கள் கேட்டுக்கொண்டுள்ளன ஒப்பந்தம் செய்தது அதை மகா ஜனங்கள் அங்கீகரிப்பதற்கு மகாத்மா, தீனபந்து இவர்கள் ஆசீர்வாதம் அவசியம் தேவை. அது கண்டு தான், முதலில் கேட்டுக்கொள்ளன் ஒப்பந்தம் முடிந்ததும், அச்சு மூலம் பிரசாரம் செய்வதற்கு முன், நான் ஒரு பிரதியை ரகசியமாக மகாத்மா காந்தியிடம் காட்டினேன். அவரது சம்மதியுடன்தான் அது வெளியிடப்பட்டது. மானடேகு சீர்திருத்தங்கள் சட்டமாக விளம்பரம் ஆவதற்குமுன் இவ்வாறேதான் எங்கேயோ ரெயில் பிரயாணம் செய்துகொண் டிருக்கையில், அடி முதல் நுனிவரையில் படித்துக்காட்டி, அவர் குற்றமில்லை

என்று ஆமோதித்த பிறகுதான் பத்திரிகைகளில் வெளி யாயின. இதற்குப் பிறகு ஜம்னுதாஸ் த்வாரகாதாஸ் அவரைப் பிரதிகூலமாய்த் திருப்ப முயன்றும் முடியா மல் என்னைக் கண்டு, "நீங்கள் முந்திக்கொண்டீர்கள் போலும். மோசம் போனேம்" என்று பரிகாசமாய் வருத்தப்பட்டார். சாக்கார் தங்கள் ஏஜன்டை ஒரு காரியத்தில் அமைத்தால் நான்கெல்லே கட்டி ஒரு சங்கேதக்கப் பத்திரம் கொடுப்பார்கள். அதில் எழுதி யிருப்பதற்கு மாருக ஏஜண்ட் செய்யக்கூடாது. அடிக் கடி தந்தி யடித்துத் தெரிந்துகொள்ள வேண்டும்! தும்ம வேண்டுமானுலும் தந்தி மூலமாய் உத்தரவு பெற்றே தும்ம வேண்டும். இத்தகைய நிர்ப்பந்தங்களுக்கு உள்ளாகி, அர்சாங்கத்தாருக்குப் புத்தியுள்ள ஒரு கருவியாய் நின்று காரியங்களைச் சாதிக்க, தீனபந்து ஆண்ட்ரூஸ் போன்ற சந்நியாசிகள் தகுந்தவரல்லர் நான்மட்டும் அத்தகைய உத்தியோகத்திற்குத் தகுந்த வனு என்றுல், அதைக் கொஞ்சம் விரிவாகவே ஆராய வேண்டும்.

## உத்தியோக முறைக்குத் தகுதியில்லை

**வே**லைகளில் உத்தியோகப் பற்றுள்ளது, உத்தியோ கப்பற்றற்றது என்று ஸ்தூலமாய் இரு வகை உண்டு. நாம் இப்பொழுது ஆராய்வதற்குப் பின் வருமாறு பிரித்துக்கொள்வோம். நிர்ணயத்துடன் இந்த இந்தக் காரியங்கள் இன்ன இன்ன வேலையில் நடக்க வேண்டு மென்று ஏற்பட்டிருந்தால் அவை உத்தியோகப் பற்றுள்ளவை என்றும், அப்படி ஒரு கற்பனை இல்லா மல் அவரவர் இஷ்டப்பட்ட வேலையில் இஷ்டப்பட்ட காரியத்தைச் செய்யலாமென்றுல் அவை உத்தியோகப் பற்றற்றவை என்றும் சங்கேதகம் வைத்துக்கொள்வோம். முதல் வகுப்புக்கு முக்கிய உதாரணங்கள் சாக்காருக்கும் சாக்கார் போன்ற ஸதாபனங்களுக்கும் அடங்கிய உத்தி

யோகங்கள். இரண்டாவது வகுப்புக்கு உதாரணம் காங்கிரஸ், காங்கிரஸ் போன்ற கண்டிப்பான வரம்புகள் கட்டாத ஸ்தாபனங்களின் கீழ் இருக்கும் வேலைகள்- உத்தியோகப் பற்றற்ற வேலைகளில் தத்தம் மனச் சாட்சியும் சாமர்த்தியமுமே அவரவர் செய்யும் காரியங்களுக்கு அளவு. அதுவும் தொழிலாயில்லாமல் சிறிது நேரந்தான் உழைப்பதென்றால் ஒழுங்கானவர் இருந்தால் காரியமாகும். கொஞ்சம் ஒழுங்கில்லாதவராயிருந்தால் வேலை ஊழல், பாக்கி ஊழல் எல்லாம் உண்டாகும். முக்கால் வாசிப் பொதுக் காரியம் பெரியதாய்த் துவக்கினால், இன்னது முக்கியம், இன்னது இரண்டாம் பக்ஷம், இன்னாரைச் சேர்க்க வேண்டியது, இன்னாரை நீக்க வேண்டியது, இவருக்கு இந்த வேலை, அவருக்கு அந்த வேலை என்றெல்லாம் கொஞ்சம் அதிகாரம் காட்டியும் காட்டாமலும் தந்திரமாய் நடத்தக்கூடியவர் கிடைப்பது அரிது. உத்தியோகப்பற்றுள்ள விஷயங்களில் இரண்டாந் தரம் மூன்றாந் தரப் பேர்வழிகளும் பேர் சொல்லிவிடலாம். உத்தியோகப் பற்றற்ற பிராந்தியத்தில் முதல் தர மனிதரே தேறுவார். தலைவன் சீக்கிரம் தீர்மானம் செய்ய வேண்டும்; நிறைவேற்ற வேண்டும். தர்மம், அதர்மம், முறை, பிசகு என்று யோசனை செய்ய அவகாசம் இராது. 'ஸம்சயாத்மா விநச்யதி' என்பது வட மொழி வசனம். நேரான மொழி ஆங்கிலத்திலும் உண்டு: 'தயங்குவோர் இறப்பர்' என்று அர்த்தம்.

பம்பாயில் பிரோஸ் ஷா மேத்தா என்ற பெரியவர் இருந்தாரே, அவரை மற்றவர் அநேகர் எஜமானரென்று கொண்டாடிக் கீழ்ப்படிந்தார்கள். எவ்வளவோ தடவை பம்பாய்க்கு அவரே தலைவர் என்று கோகலே புகழ்ந்திருக்கிறார். அம் மாதிரி முகவெட்டு உள்ளவர்களை உத்தியோகப் பற்றுள்ள வர்க்கத்தில் போடுவது வியர்த்தம். கோகலேக்கும் அந்த நிர்வாக சக்தி இருந்தது. மகாத்மா காந்திக்குச் சம்பூர்ணமாக இருக்கிறது.

ஸ்ரீமதி பெஸன்டுககு நாம் சொலல வேணடுமா? எனககோ நாடடாணமை நடததுவதறகுத திறமை போதாது. இதை நான நன்கறிந்தேன ஆதலால, தகக தலைவருககுப பின் நின்று கையாளாய உதவுவேன். அதறகு மேல ஆசையும் இலலை. எப்பொழுதாயினும் அந்த ஆசை உணடானால சீககிரததில அடககி விடுவேன.

ஆனால் சர்க்கார உததியோகததிற்குத் தகுதி உணடா ஆசையுணடா எனறால அதுவும் அவவளவாக இல்லை லணடனில இந்தியா கௌன்ஸிலுககு அழைத தாாகள். லாாட வில்லிஙடன், 'கௌனஸில ஆப ஸ்டேட' தலைவா பதவி கொடுததாா. வேணடாம் என று நான் கூறிவிடடேன். தென்னாப்பிரிககா ஏஜணடாகப் போனது மகாதமா காந்தியின் தூணடுதலால. லாாட இாவினும், ஸா முகம்மத ஹபிபுலலாவும் சோந்தாா கள். தென்னாபபிரிககாவில இனனும் ஒரு வருஷமாவது இருகக வேணடும என று மூவரும் வறபுறுததினாாகள. எனககு அவவளவு பேராசை இலலை. இஙகேயும் வைஸராயினுடைய கௌன்ஸில வேலை நிசசயமாகக கிடைககும் எனறிருந்த பொழுதுஙகூட, அதற்குத தககபடி வணககஒடுககம் பாராடடவிலலை. சாககாா சில முறை அபிபபிராயததைத தெரிவிததும் நான் வேறு வழியே சென்றேன் 'இழந்தீரே!' என று சொலலியும் காடடினாாகள எனககு அதில யாதொரு விசனமும் இலலை. ஏனெனில அததகைய பெரிய ஸதானம் நமமைத தேடி வர வேணடும்; நாம் அதைத தேடக கூடாது. நம் சொந்த யோககியதையால கிடைத்தால தான் வேலையைக கௌரவமாயக காபபாற்றலாம். மற்றொருவா தயவால் வந்தால தலை தூககி மரியாதை யைக் காப்பது கஷடம். இக காலததில பெரிய உததி யோகங்களுக்குப போடடி போடடு இழிவான உபாயங களை செயது அடைய முயலகிறாாகளே! அது மிகவும் விசனிக்கத் தகுந்தது.

## ரோட்ஸ் பிரசங்கி

ஆறு வருஷங்களுக்கு முன் இங்கிலாந்துக்குப் போகும்படி ஒரு நல்ல அவகாசம் இருந்தது. 'ஸெஸில் ரோட்ஸ்' என்பவர் பெருந் தொகை வைத்து ஆக்ஸ்போர்டு யூனிவர்ஸிடியில் ஒரு ஸ்தாபனம் ஏற்படுத்தியிருக்கிறார். பிரசித்தரான ஓர் அறிஞரை அழைத்து அந்த வித்தியா நிலயத்தில் மூன்று நான்கு மாதம் வசிக்கச் செய்து அங்கே படிக்கும் வித்தியார்த்திகளுடன் நெருங்கிப் பழகிச் சில பிரசங்கங்கள் செய்ய வேண்டும் என்று நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. இந்தியரில் ஒருவர் கூட இதற்கு நாளாக 'ரோட்ஸ் பிரசங்கி' என்கிற இந்தப் பதவிக்கு அழைக்கப்படவில்லை. மகாகனம் எச். ஏ. எல். பிஷர், அந்த ஸ்தாபனத்திற்கு அதிகாரியாயிருந்தபொழுது ஒரு தடவையும், அவருக்குப் பிறகு லார்ட் லோதியன் ஒரு தடவையும் என்னை அழைத்தார்கள். சர்வ கட்சி மகாநாட்டில் இரண்டு வருஷம் லண்டன் குளிரை பொறுக்க மாட்டாமல் கஷ்டப்பட்டதால் அதிகக் குளிரான ஆக்ஸ்போர்டு போவதற்குப் பயந்தேன். மேலும் என் மனைவிக்குக் கொடும் வியாதி ஏற்பட்டு டாக்டர் எஸ். ரங்காசாரியாருடைய ஸம்ரக்ஷணை கிருகத்தில் இருந்தாள். எனக்கும் மார்வலி அடிக்கடி வந்தபடியால் அவரை யோசனை கேட்டேன். அவர் சம்மதிக்கவில்லை. தம்மைப் போல ஒரு பெரிய வைத்தியரைக் கூடவே அழைத்துப் போனால் போகலாம்; அதுவும் இரண்டாம் பட்சம் என்றார். மூன்றாவது தடவை கூட ஆக்ஸ்போர்டு சிநேகிதர் ஒருவர், நான் வருவதாயிருந்தால் அழைப்புப் பத்திரம் அனுப்பி வைக்கிறதாகத் தந்தி அனுப்பினார். நான் வேண்டாமென்றால் வேறு இந்தியருக்கு இந்தக் கௌரவம் கிடைப்பது அரிது என்று கூடச் சொன்னார். அதற்கும் நான் இணங்கவில்லை. இந்த விஷயத்தில் எனக்கு அவ்வளவு தீராத துயரம் இல்லை.

ஏனெனில் அந்தக் காரியம் கால் பங்கே தேச சேவையை ஒட்டியது. முக்கால் பங்கு என்னுடைய சொந்தப் பெருமைக்குக் காரணமாக இருந்திருக்கும்.

## மாணவருக்கு நல் வார்த்தை

என்னை மிக்க சோம்பேறியென்று சொல்லமாட்டார்கள். ஆயினும் உண்மை எனக்குத் தெரியுமே! எவ்வளவோ காலத்தை வீண் போக்கியிருக்கிறேன். சீட்டாட்டத்திலும் வீண் வம்பு பேசுவதிலும் வெகு காலம் போயிற்று. இதைத் தமிழ்ப் படிப்பிலும் ஸம்ஸ்கிருதப் படிப்பிலும் போக்கியிருந்தால் எவ்வளவோ மேன்மை! தமிழைத் தாய்மொழியாய்ப் படைத்து, அதிலுள்ள அழகிய நூல்களைப் படியாததும், அதில் நேர்த்தியாய்ப் பேசவும் வரையவும் கற்காததும் பெருத்த குற்றமும் வெட்கமுமாகும். அண்ணாமலை யூனிவர்ஸிடியில் கிழப் பருவம் வந்த பிறகு ஐந்து வருஷ காலம் தலைமை ஸ்தானத்தில் இருந்தேன். தேக ஸ்திதி இடங் கொடுத்த மட்டில் பிள்ளைகளுக்குப் பாடம் கூடச் சொல்லி வந்தேன். இதுதான் எனக்கு மிக்க சந்தோஷத்தை விளைவித்தது. இந்திய ஊழியர் சங்கத்தில் காலம் கழித்த போதெல்லாம் பிறருக்கு உபதேசம் செய்யும் முறையே மறந்திருந்தது. யூனிவர்ஸிடி மாணவர்களைக் கண்டதும் பழைய உத்ஸாகம் திரும்பக் கிளம்பிற்று. இன்னமும் அதிகமாய்ச் சொல்லி வைக்கவில்லையே என்பதுதான் மனக்குறை. பிள்ளைகளுடன் பழகி அவர்களுக்கு நல்லறிவை ஊட்டி அவர்கள் குணங்களைப் பரிமளிக்கச் செய்து அவர்களைத் தாய் நாட்டுக்குத் தக்க மக்களாக ஆக்குவதைவிடப் புண்ணியம் உண்டோ? உபாத்தியாயர் வேலைக்குக் கீழ்ப்பட்டதுதான் எதுவும்!

ஐயோ, இந்தக் கல்வி நிலயங்களை வேண்டுமென்று கெடுக்க முயல்கிறார்களே! இது தேசத்துக்கு அநேகம்

கேடுகளில் தீராக் கேடு! அண்ணாமலை நகரில் நேர்ந்த ஒரு நிகழ்ச்சியைச் சுருக்கமாக உரைக்காவிடில் என் கதை பூர்த்தி பெறாது. ஆனால் ஸ்ட்ரைக் - அதாவது படிப்பு நிறுத்தம் - யூனிவர்ஸிடியின் வேலை நிறுத்தம் என்கிற கிளர்ச்சி பிரபலமாய் நாளுக்கு நாள் வளர்ந்ததை வரலாறாக எழுதப் போகிறேன் என்கிற பயம் வேண்டாம். நான் அடைந்த கேதங்களும் சரீர நோயும் மன நோயும் போக, முடிவில் என்ன நீதிகள் பாக்கி நிற்கின்றன? உலக இயல்பு என்ன? என்ன தெரிந்துகொண்டேன், என்பதை விளக்கினால் சற்றுப் பயன் படலாம். உலகில், 'அறம் வெல்லும், பாவம் தோற்கும்' என்று ஒரு வசனம் உண்டு. தூங்காமல் பிரயத்தனம் செய்தாலொழிய நல்லது தானாக வெல்லாது. அண்ணாமலை யூனிவர்ஸிடியில் கலகம் நடக்குங்கால் உபாத்தியாயரெல்லாரும் ஒருவர் போல் நின்று ஸ்தாபனத்தைக் காப்பாற்றாவிடில் மோசம் போயிருக்கும். விஷமிகள் சிலரே; சாதுக்கள் அதிகம். ஆயினும் விஷமிகளே மேலிட்டார்கள். அப்படித்தான் எங்கும் எப்பொழுதும். ஆங்கிலத்திலுள்ள ஒரு பழமொழிப்படி யோக்கியர் தூங்கும்போது திருடன் தன் காரியத்தை முடித்துவிடுகிறான். பிள்ளைகள் ஆதியில் கூடிப் படிப்பு நிறுத்தம் செய்யும்போது ஒரு காரணம் இருந்திருக்கும்; ஒரு நாள், தப்பினால் இரண்டு நாள் அமர்க்களப்படும். பிறகு வழக்கம்போல் ஒத்து வாழும் குடும்பம்போல் ஆகிவிடும். புயல் அடங்கிய பிறகு, 'இந்தச் சமுத்திரமும் பொங்குமா!' என்று தோன்றும் அல்லவா?

இப்பொழுதோ என்றால் மாணக்கருக்குச் சில உரிமைகள் உண்டு. அவை பிறப்புடன் கிடைக்க வேண்டியவை. அவற்றைப் பெற்றோரும் உபாத்தியாயரும் கூடி முரட்டுத்தனமாய்ப் பிடுங்கிக்கொண்டார்கள். அவைகளைத் திரும்பி அடைய இந்தியாவிலுள்ள எல்லா மாணக்கருமே ஒரு மகா சங்கமாகக் கூடி

ஸேனாபதிகள் போல சிலரை, அதிகார வாகமாகத் திட்டம் செய்து ஓய்வின்றி முயலுதல் அவசியம். கிளர்ச்சி உண்டாக்குவதையே தொழிலாகக் கொண்ட சிலர் அங்கும் இங்கும் சஞ்சரிக்கிறார்கள். பல முதலிய இடங்களில் எப்படி, புகார்களுக்குக் காரணம் எப்பொழுது வேண்டுமானாலும் கிடைக்குமோ, கொஞ்சம் இருந்தாலும் பட்டாசு என்று தீக்குச்சி பட்டாற்போல வெடிக்குமோ, அப்படிப்போல சாசுவதப் புகார்களின் வரிசை தயாராக இருக்கிறபடியால் மனக் கொந்தளிப்பு, தீராத வியாதிபோல குடியேறி விட்டது. காலையில் பத்திரிகையைத் திறந்தால் எங்கேயாவது பிள்ளைகள் வேலை நிறுத்தம் கண்ணில் படுகிறது. கலியுகம் முற்றிய படியால் ஆங்காங்கு உபாத்தியாயர்களும் இவ் வழியே செல்கிறார்கள். இந்தக் கொடிய ஓட்டுவார் ஓட்டிக்குத் தக்க மருந்து யாரும் கண்டு பிடிக்கவில்லை.

## சுயாதீனத்தின் தன்மை

அண்ணாமலை நகரில் கலகம் நேர்ந்து பிள்ளைகள் தலைவிரித் தாடுங்கால் நான் எவ்விதம் அதைச் சமாளித்தேன்? வழக்கம்போல் வாழ்த்துவாரும் உண்டு; தூற்றுவாரும் உண்டு. முதலிலேயே கடுமை காட்டித் துஷ்டர்களில் ஐந்தாறு பேரைத் தள்ளிவிட்டிருந்தால் கம்மென்று எல்லாம் அடங்கியிருக்கும் என்று உறுதியாய்ச் சிலர் அபிப்பிராயப்படுகிறார்கள். இடத்தைக் கொடுத்தால் மடத்தைப் பிடுங்குவது மனிதருக்கு இயல்பு. தண்டப் பிரயோகமே உத்தமம் என்று எண்ணுவோர் பலர். எனக்கு அந்த வழி நியாயமென்று அப்பொழுதும் தோன்றவில்லை; இவ்வளவு துன்பப்பட்ட பிறகு இப்பொழுதும் தோன்றவில்லை. குற்றவாளிகளைச் சிட்சிக்கும்போது குற்றமற்றவர்களுக்கு மன அமைதியை உண்டு பண்ண வேண்டியது கடமை. அவர்கள் நடுங்கி ஒடுங்கித்தான் பிழைக்க வேண்டுமென்று

நினைககககூடாது. நாம் ஒழுஙகாயிருந்தால் சுதந்தரம் ஒன்றும் குன்றுதென்கிற தைரியம் நலல பிளளைகளுககு இருகக வேணடும். சுயாதீனம் (Liberty) எனபதில பகுதி திடமாயிருந்தால அதைச சிலா துாவிநியோகப படுத்தினாலும் பொறுததுககொளள வேணடும். பெரும்பாலோருககுச சுயாதீனம அமுதுபோல ஆகும். சிலருககு லாகிரியை விளைவிககும் இதைப பொறுகக வலிமையிலலாது அளவு மீறிச சிடசிகக ஆரம்பிததால எலலாம் நலவழிககு வநதுவிடுமெனறு நிசசயமாயச சொலலவே முடியாது. தீயில எணணெய ஊறறினாற்போல ஆனாலும் ஆகும்.

நான் படபடக்காமல் பிள்ளைகளிடம் நல்லவாாததை சொனனேன்.- நலலுபதேசஙகளை விளம்பரப் படுததினேன். தகப்பனமாருககு எசசரிககை அனுப்பினேன் இது வெகுவாகப பயனபடாது எனறு அறிந்துகொணடவுடன் வகுப்புகளை மூடிப் பிளளைகளை வீடடுககு அனுப்பிப பயமும் நயமும் கலந்து பததிரிகைகளில எழுதிப் பாாததேன் என துாதிருஷடமோ யூனிவாஸிடியின துாதிருஷடமோ இதுவும் பயன் தரவிலலை. பிளளைகளுககு நான் இணஙகி, விதிதத சிடசையை மாறறி மாணககரின அன்பை மறுபடி கவாநதுகொளவதே சரியெனறு பெரிய உததியோகஸ்தாகள சிலா புததி சொனனாாகள. இவாகளால என் துன்பம் வளாததது. அடிககடி உபாததியாயாகளைக் கேடடுக்கொணடும், கோபம், காவம் முதலான கெடட குணஙகளுககு இடஙகொடாமல நனறாயப பரியாலோசனை செயதும் நடந்து வந்ததால, விசேஷமாயக காரியஙகளை ரததுச செயயாமலும், உததரவுகளை வாபீஸ் வாங்காமலும் பிழைததேன. நாள் அதிகம் பிடிததது; வேதனை அதிகமாயிற்று; இரணடு மூன்று தடவை தலைககுமேல போயவிடும்போலும் இருந்தது.

இதெல்லாம் உணமைதான. ஆனால பொய, பித்தலாடடம். நான் செயயவிலலை. அநியாய தணடனை விதிககவிலலை. பொறுமை, மனனிபபு, ஔதாரியம் இந்தக் கடமைகளைக கைவிடவிலலை. என் சாந்தததைப் பாரதது அநேகர, 'இளைததவன' என்று குதிரை யேறினாரகள; வஞசனை செயதாரகள். அதனால நான தபபுக காரியம் செயதேன் என்று ஆகவிலலை. சாம மாக்கம் கூடாது, தணடததையே கையாள வேணடுமென்று கூறமாடடேன.

முடிவில என் கொள்கை இதுதான். மறுபடியும் கிளாசசி உணடாகி நான் அதிகாரம் வகிததால மிருதுவான உபாயததையே தேடுவேன. தீராத அளவுதான, 'ஐயோ, வேறு விதியிலலையே' என்று சிடசை விதிபபேன. சுதந்தரஙகளின உணமையான மேன்மையைப் பிள்ளைகளுககுக கறபிதது, அவரகளிடம் நேரான ஆசையை உணடுபணணுவதற்கு வேறு குறுககு வழியே இலலை.

# எங்கள் ஊர்

பண்டை நாள் கொள்கைகளில் வெகு மேன்மையானது ஒன்று, ஜீர்ணோத்தாரணம் என்பது. புதுக் கோவில் கட்டுவதைக் காட்டிலும் பாழடைந்த கோவிலைப் புதுப்பிப்பது பெரிது. இக் காலத்து ராஜீயத் துறையில் தேர்ந்தவர்கள், 'நம் கிராமங்களை முன் இருந்த நிலையில் ஏற்றி வைத்தால், அதுவே ஒப்பற்ற கைங்கரியம்' என்று எண்ணுகிறார்கள்: 'கிராமங்களில் பழைய நிலை எப்படி இருந்தது? அது திரும்புமா? திரும்புவது நலமா?' என்பவையெல்லாம் பெரும் கேள்விகள். விடை சொல்வது எளிதல்ல. எவ்வளவோ சரித்திர ஞானமும் பொது நன்மையின் உண்மையும் தவறாது சீர்தூக்கும் திறமையும் வேண்டும். 'ஓடிய வெள்ளம் திரும்பாது' என்பதுபோல், பழைய மாதிரிகள் அப்படியே திரும்பா. அநேக மாறுதல் செய்வது அவசியம். இம் மாறுதலின் ஸ்வரூபத்தைத்தான் புத்திமான்கள் தீர்மானிக்க வேண்டும். வேறு வேறாய்ச் சொல்வார்கள் பெரும்பாலோரது அபிப்பிராயத்தைக் கண்டு பிடிப்பதுகூடக் கஷ்டம். சிலருக்கு, நாகரிகம் குறைய வேண்டும் என்றும், சிலருக்கு அதிகப்பட வேண்டும் என்றும் கொள்கை உண்டு.

ஒரு பெரியார் இந்த விஷயத்தை ஆராய்ந்தது, ஞாபகத்திற்குத் தெளிவாய் வருகிறது. அது வெகு விசித்திரம். நாட்டுப் பிரதேசங்கள் முன்னேற வேண்டுமானால் படித்தவர்கள் அங்கே குடியேற வேண்டும் என்று அடிப்படையாக அவர் சாதித்தார். அவர்கள் குடியேறுவதற்கு வசதிகள் வேண்டுமே! நல்ல கட்டிடங்களும் மகா ஜனங்கள் கூடுவதற்குப் பொது இடங்களும் நல்ல பள்ளிக்கூடமும் மின்சார டிராம்களும்

சினிமாக்களும் வேண்டும் என்று ஒவ்வொன்றாக ஏற்றிய பட்டண வாழ்க்கைக்கு ஏறக்குறையச் சம மாகவே வருணித்தார்.

'அவ்வளவு தூரம் போவது முடியாத காரியம்; சரி அல்ல' என்று கூட்ச் சிலர் கட்சியாடுவர். இத்தகைய விஷயங்களைத் தீர ஆராய்ச்சி செய்ய வேண்டுமானால் முதலில் நம் கிராமங்கள் எப்படி இருந்தன என்பதை அறிய வேண்டும். புஸ்தகங்களாலும் தஸ்தாவேஜிகளா லும் பேருதவி பெறலாம் ஆயினும் ஐம்பது அறுபது வருஷங்கள் அநுபவம் உள்ளவர்கள் தாங்கள் நேரில் பார்த்தவண்ணம் சின்ன ஊர்களின் வாழ்க்கையை வருணித்தால் நமக்கு உண்மை நன்கு விளங்கும். கிராமங்கள் எவ்வளவோ மாதிரி. எவ்வளவோ போக்ள் எடுத்து உரைத்தால்தான் பயன் உண்டு. இதன் பொருட்டுத்தான் கலைமகள் ஆசிரியர் நல்ல யோசனை செய்து, 'எங்கள் ஊர்' என்ற தலைப்பு வைத்து, ஒரு கட்டுரைத் தொடர்ச்சியைத் துவக்குகிறார். இதில் கலந்துகொள்ள இடம் கொடுத்தது எனக்கு வாய்த்த ஒரு பெருமை.

## வலங்கைமான்

என் பிறப்பிடமான வலங்கைமான் கும்ப கோணத்துக்கு ஆறு மைல் தெற்கே உள்ளது. இதைப் பற்றிய பெரியோர் இயற்றிய பாடல்கள் இருப்பதாக மகா மகோபாத்தியாய சாமிநாதையர் அவர்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன். இங்குள்ள சிவாலயத்தில் சிவபெருமானது வலது கையில் மான் இருக்கிறது; அதனால் அப் பெயர் அமைந்தது கிராமத்துக்கு வடக்கு எல்லை குடமுருட்டி ஆறு. என் பாலியத்தில் ஜலம் நிறைந்து போகும்போது எழு எட்டு அடி இருக்கும் இப்பொழுது நாணல் போட்டுக் குறுக்கிவிட்டார்கள்; மேடு இட்டு நீந்தவே முடியாது. அக்கிரகாரத்துக்கு

மேற்கில் விஷ்ணு ஆலயமும் குளமும் இருக்கின்றன. தெற்கே ஒரு சிறு வாய்க்கால், வீடுகளின் கொல்லை களை ஒட்டி ஓடும். கிழக்குத் திசையில் குடியானத் தெருக் களும், மாரியம்மன் கோவிலும் இருக்கின்றன. பெரிய கோவில்களுக்குத் தேர் உண்டு. ஆனால் அவை ஓடி நான் பார்த்ததே இல்லை. என் காலத்துக்கு முந்தியே, அவைகளின் உபயோகம் நின்றுவிட்டது. தேரின் சமரட்சணத்திற்காகப் போட்டிருக்கும் கொட்டகைகூட அழிந்து போயிற்று; பழுது பார்ப்பார் இல்லை.

கிராமமோ மிகப் பெரியது. தஞ்சாவூர் ஜில்லாவில் முதல்தரமான கிராமங்களில் சேர்க்கலாம். கீழ் மேலாக ஒன்றரைப் பர்லாங்கு நீளம் உள்ள மூன்று வீதிகளும், அவைகளை இணைக்கத் தென் வடலாக இரண்டு வீதி களும் உள்ளன. இந்தக் குறுக்கு வீதிகளிலும் வடக்கு வீதியிலும் ஒரு சிறகுதான் உண்டு. நடு வீதியிலும் தெற்கு வீதியிலும் எதிரும் புதிருமாகத் தொடர்ச்சி யாகவே வீடுகள் இருந்தன. ஜனங்கள் நிறைந்து இருப் பார்கள். அகங்கள் காலியாகவாவது அதிக காலம் பூட்டியாவது இரா. நான் பிறப்பதற்குப் பதினைந்து வருஷங்களுக்கு முந்தி வலங்கைமான், தாலுகா அந்தஸ்தைப் பெற்றிருந்தது. பிற்காலத்தில்தான் கும்பகோணம் ஓங்கியது.

## அதன் கீர்த்தி

அந் நாளில் ஒரு வழக்கம், இக் காலத்தவர் நம்பக் கூடாததாக இருந்தது. சர்க்கார் நிலவரி வசூலிப்பது மிகவும் கஷ்டம். ஜனங்களுக்கு நடைமுறைக்குப் போது மான அளவு வெள்ளி நாணயமாவது செப்பு நாணய மாவது இல்லை. காசைக் கண்டால் நிதியைக் கண்டது போலத்தான்! விடமாட்டார்கள். ஏராளமாக நெல் இருந் தாலும், அதைச் சமயத்தில் விற்றுப் பணமாக்குவது மிக அரிது. கிஸ்துக் காலம் என்றால் மிராசுதாரர்களுக்கு

மிகவும் பொல்லாத காலம் ரெவின்யூ இன்ஸ்பெக்டரும் தாசில்தாரும் டலாயத்தையும் தலையாரியையும் விட்டு நெறிப்பார்கள். பெரிய பிரபுக்கள் கூட அநேக நாள் ஒளிந்துகொண்டே இருப்பார்கள். அகப்பட்டவர்களை மரியாதையின்றிப் பேசுவதல்லாமல் தெருவில் நிறுத்தி, காதைக் கிள்ளுவதும் தோப்புக்கரணம் போடச் செய்வதும் இன்னும் வெகு கொடுமையான தண்டனைகளைத் தருவதும் வழக்கம். இப்படி அநாகரிகமான மானக்கேட்டுக்குப் பெரிய மனிதரையும் உள்ளாக்குவது செய்யத்தகாத அநியாயம் என்று நம்மூருக்கு வந்த பார்லிமெண்ட் அங்கத்தினர் சிலர் சீமையில் கூச்சல் போட்டார்கள். இதன் உண்மையை விசாரிப்பதற்காக 1858-ஆம் வருஷம் ஒரு 'கமிஷன்' நியமித்தார்கள். அதற்கு, 'சரீரக் கொடுமைக் கமிஷன்' (Torture Commission) என்று பெயர். அவர்கள் முடிவில் எழுதிய யாதாஸ்தில், வலங்கைமானின் பெயரும் அதன் உத்தியோகஸ்தர் சுப்பராயர் என்பவர் பெயரும் அமைந்திருக்கின்றன. இத்தகைய கீர்த்தி எல்லாக் கிராமங்களுக்குமே வாய்க்குமா!

## கச்சேரி விவகாரம்

சென்ற நூற்றாண்டின் நடுவில் எங்களூருக்கும் கும்பகோணத்துக்கும் கெட்ட பெயர் உண்டு. 'கும்பகோணம்' என்னும் சொல்லுக்கே, 'பித்தலாட்டம், போக்கிரித்தனம்' என்கிற அர்த்தம் கிடைத்து அகராதியிலுங்கூட எழுதப் பெற்றது. இன்றும் சென்னை மாகாணத்தின் மூலை முடுக்குகளிலுங்கூட, 'ஏதோ கும்பகோணம் செய்து விட்டானையா! பாபி!' என்று சொல்லக் கேட்கலாம். நான் கும்பகோணத்தான் ஆச்சுதே என்று தெரிந்தும் கூசமாட்டார்கள் சிலர்.

சர்க்கார் உத்தியோகஸ்தர்களுக்கு வலங்கைமான் என்றால் அச்சம் உண்டு. அவ்வூரார் கோள் கடிதம்

எழுதுவதில் பேர் பெற்றவர். வலங்கைமான் இலாகா வுக்கு ஒரு முனிசிப் கோர்ட் தனியாக இருக்கிறது. ஆனால் அதைச் சில சௌகரியங்களுக்காகக் கும்ப கோணத்தில் வைத்திருக்கிறார்கள். இது தவிர, கும்ப கோணத்தில் நாலைந்து பெரிய கச்சேரிகள் உண்டு. அங் கெல்லாம் வலங்கைமானார் கட்சிக்காரர்களாயும் சாட்சி களாயும் தினந்தோறும் காணப்படுவார்கள். ஜட்கா வண்டிக்காரர்களுக்கும் சிற்றுண்டிக் கடைக்காரர்களுக் கும் ஓய்வில்லாமல் வரும்படி கிடைக்கும்.

ஊரில் ஒரு பட்டா மணியகாரர் இருப்பார். அவர் தகுந்த குடும்பத்தில் பிறந்த தெலுங்கர். நல்லவர் என்றும் கெட்டிக்காரர் என்றும் சொல்லுவார்கள். ஆயினும், ஏழை ஜனங்கள்கூட அவரிடம் விவகாரங் களைக் கொண்டுபோவதில்லை. எப்படியாகிலும் பெரிது பண்ணிக் கும்பகோணத்திற்கே செல்வார்கள். வெகு பேருக்குச் சட்டம் போகும் வழியும் வியாஜ்ய முறை களும் செவ்வையாய்த் தெரியும்.

## மோசம் போன கதை

எங்களூர்ப் பிள்ளைகளை ஏமாற்றுவது எளிதல்ல. ஒரு தடவை மட்டும் சிறுவர், பெரியவர் எல்லோருமே மோசம் போனார்கள். அதை இவ்விடம் குறிக்கலா மென்று எண்ணுகிறேன். எனக்கு ஏழெட்டு வயசு உள்ளபோது இங்கிலீஷ்ப் பள்ளிக்கூடம் ஒன்றும் ஊரில் நிலை பெறவில்லை. இங்கிலீஷ் புதுப் படிப்பானதால், அதைக் கைப்பற்ற ஆசை உள்ளவர் குறைவு. கும்ப கோணம் சமீபத்தில் இருந்ததால் அங்கேயே சிலர் ஜாகை போடுவார்கள். சோற்றுக்காரிகளை நம்பியும் சிலர் பிள்ளைகளை அனுப்புவார்கள். 'முதல் தரமென்று புகழ் பெற்ற கிராமத்திற்கு இது அழகல்ல. நாலைந்து வகுப் பாவது உள்ள பள்ளிக்கூடத்தை ஊன்றி நாட்ட வேண்டும்' என்ற ஓர் ஆசை பிறந்தது. இதை நிறை

வேறுறுவதற்கு மெட்ரிகுலேஷன் வரையில் படித்த, முப்பது வயசுள்ள ஓர் ஐயங்கார் வந்தார். அவர் நல்ல வாசாலகர். ஆள் சிவப்பு நிறமாயும் வாட்ட சாட்ட மாயும் முகவெட்டுள்ளவராயும் இருந்தார் அவர் உபதேசம் வெளியானதும், ஊரில் உள்ள அரைப் படிப்பு காலபடிப்புக்காரப் பிள்ளைகள் அவரைச் சுற்றிக் கொண்டார்கள். ஒரு வீட்டை வாடகைக்கு வாங்கி நாலு வகுப்பு வைக்கவே, 'கெஜ கெஜ' என்று குழந்தை கள் நிரம்ப வந்துவிட்டார்கள். ஐயங்காரவர்கள் தம் உடம்பு நலுங்காமல், சில சட்டாம்பிள்ளைகளைக் கொண்டே பாடம் நடத்தி வந்தார்.

ஒரு வாரம், பத்து நாள் ஆனவுடனே, பள்ளிக் கூடத்திற்கு எதிர் வீட்டுத் திண்ணையில் பெரிய சீட்டுக் கச்சேரியும் வம்புக் கூட்டமும் ஏற்பட்டு, அவ் விரண்டி லும் ஐயங்கார் நாட்டாண்மை கொண்டார் படிப்பில் கவனம் குறைந்தது கண்டு சில பெற்றோர்கள் முணு முணுக்கத் தொடங்கினார்கள் அதை அடக்க ஐயங் காருக்குத் தெரியாது? 'தக்க கட்டிடம் இல்லாமல் பள்ளிக்கூடம் நடவாது' என்று ஒரு பேச்சைக் கிளப்பி ஊர்ப் பெரியோர்கள் அதற்கு வேண்டுமான அளவு திரவியம் சேர்க்க வேண்டுமென்று முயலச் செய்தார். மாணுக்கர்களை விட்டுத் தாய் தந்தையர்களைத் துரிதப் படுத்தினார் ஏதோ ஒரு நாளும் இல்லாத உத்ஸாகம் தலைப்பட்டு, இரண்டு வாரத்துக்குள் இரண்டாயிரம் ரூபாய், வாய்மொழியில் சேர்ந்தது சிலர் பணமாகவும் சிலர் 'பிராமிசரி நோட்'டாகவும், இரண்டொருவர் நகைகளாகவும் அவரவர் பங்கைச் சேர்ப்பித்தார்கள் பள்ளிக்கூட ஸ்தாபகர் அவசர அவசரமாக நோட்டுக் களையும் நகைகளையும் கூடியவரையில் ரொக்கமாக்கிக் கொண்டு, ஒரு நாள் ஒருவரிடமும் சொல்லிக்கொள்ளா மல் ஊரை விட்டே போய்விட்டார். உடனே எங்கள் ஊரில் உண்டான் திகைத்ததுக்கும் வியப்புக்கும் அளவே இல்லை.

'நம்மை ஏமாற்றுவோன் நல்ல கைகாரனாய் இருக்க வேண்டும்' என்று சொன்னார்கள். துணிந்த குமரர் ஒருவர், 'எங்கிருந்தாயினும் ஆறு மாதத்தில் அவனைப் பிடித்து வருவேன்!' என்று சபதம் கூறினார். 'நமக்குள் ஓர் ஆசாமியைக் கைக்குள் போட்டுக்கொண்டு தான் இந்தச் சாகசத்தை ஐயங்கார் சாதித்திருக்க வேண்டும்' என்று வேறு ஒருவர் யுக்தியாகச் சொன்னார். 'ஆமாம்! தெற்குத் தெரு சுப்பன் மூன்று நாளாய் ஊரில் இல்லை' என்று வேறு ஒருவர் ஞாபகப்படுத்தினார். 'இருக்கும், இருக்கும்! கரடகனுக்குத் தமனகன் வேண்டுமோ, இல்லையோ?' என்றார் வேறு ஒருவர். இப்படிச் சிறிது காலம் வம்புப் பேச்சு நடந்ததே ஒழிய போன ஐயங்கார் போனவரே!

## நல்ல மனிதர்கள்

வலங்கைமானின் அதிருஷ்டம் அக்காலத்தில் நேரில்லை. சாஸ்திரங்களில் நன்றாகப் பயின்றவர் ஒருவர் கூட இல்லை. வேதாத்தியயனம் செய்தவர் அநேகர் உண்டு. பூர்வாபரங்களுக்கு நன்றாய்ப் பண்ணிவைக்கத் தெரிந்த உபாத்தியாயர்கள் அநேகர் இருந்தனர். ஒரு ஹவ்யம் கவ்யமென்றால், முப்பது நாற்பது பேர்கள் விபூதியும் கோபிசந்தனமும் நாமமும் போட்டவராகக் கூடுவார்கள். சேர்ந்து உரக்கப் பஞ்சாதி சொன்னால் தூரத்திலேயே நன்றாய்க் கேட்கும். பாடசாலை என்று ஓர் இடத்தில் ஏற்படாவிடினும், நாலைந்து பண்டிதர்கள் ஏழெட்டுச் சிஷ்யர்களுடன் குடமுருட்டியில் ஸ்நானம்; குளத்தில் சந்தியாவந்தனம், கோவிலில் சுவாமி தரிசனம் ஆகிய இக்காரியங்களுக்குப் போகும்போது, கோஷ்டி கோஷ்டியாய், வேதங்களைக் கோஷித்துக் கொண்டு போவார்கள். காவிய, நாடகங்கள் பாடஞ் சொல்லக்கூடிய வித்துவான்களும் சிலர் இருந்தனர்.

தீக்ஷிதர் என்று எல்லோரும் மரியாதையாய் வணங்கக்கூடிய, நல்ல ஒழுக்கமும நற்குணமும் உள்ள பெரியவர் ஒருவர் என் வீட்டுக்குச் சமீபத்தில இருந்தார் அவர் தினம் ஒரு செம்பை நாடாவில கோத்துக் கழுத்தில கட்டிக்கொண்டு, கையில ஜாலர் தட்டிக் கொண்டு, கடவுள் ஸ்தோத்திரத்தைச் சொல்லியபடியே தெருவில் போவார். ஓர் அகத்திலும் நுழைவதில்லை. சுமார் பத்துப் பன்னிரண்டு அகங்கள் ஆனதும், வேண்டிய அளவு அரிசி கிடைத்துவிடும். சிலர் கறிகாய்களும் கொடுப்பார்கள். வீட்டுக்குத் திரும்பி விடுவார். நான் எப். ஏ. வகுப்பில படிக்கும்போது, அவரிடத்தில வைஷ்ணத்தில் இரண்டு சாக்கம் பாடம் கேட்டேன்.

## இல்லாத விஷயங்கள்

தஞ்சாவூர் ஜில்லாவில், பழைய படிப்புக்குப் பெயர் போன ஊர்கள் அநேகம் இருந்தபோதிலும், வலங்கைமான் அவைகளில ஒன்று அல்ல. தலைமுறை வரிசையாக வரும் வழக்கங்களும் கட்டுப்பாடுகளும் அங்கே ஊன்றி நிற்கவில்லை. வெகு நாளைக்கு முந்தி ஊர்ஜிதமாய் இருந்து அப்பொழுதுதான் தளர்ந்தனவோ! தெரியாது. 'பலபட்டறைக் கிராமம்' என்பார்கள். பிராம்மண ஜாதியில அநேகம் உள் வகுப்பைச் சேர்ந்தவர்கள் கலந்திருப்பார்கள். கல்யாணம் முதலிய விசேஷங்கள் நேர்ந்தால், ஊரில எல்லோரையும் அழைப்பதும், அழைப்புக்கு இணங்கிப் போவதும் உதவுவதும் வழக்கம். ஆனால கிராம வாசிகள் கூட்டங் கூடிப் பொதுக் காரியங்களுக்கு வசூல முதலிய முயற்சிகளைச் செய்ததையாவது, சண்டை சச்சரவுகளைப் பஞ்சாயத்தார் கூடித் தீர்மானித்ததை யாவது நான் அறியேன். குளங்கள் ஸ்நான பானத்துக்கு அவசியமாக இருந்தாலுங்கூட, பாதுகாப்புப் போதாதுதான். ஜனங்கள் அசுத்தப்படுத்தினால், 'கூடாது' என்று தடுக்கும் உத்தியோகஸ்தரும்

இல்லை; 'இது பொது நன்மைககு விரோதமே; எப்படிச செயயலாம்?' என்று ஓங்கிச சொல்லும் பெரியோரும் இலலை. சந்து பொந்துகள, காலி ஸதலஙகள், வாயககால முதலிய இடஙகளுககுப் போகும் வழிகளு எலலாவற்றையும், குழநதைகளும தளளாத கிழவாகளும் சரீர பாதைகளைக் கழிபபதற்குத தஙகு தடையின்றி உபயோகப்படுததுவாாகள. 'பாய்கானு' என்பதே தெரியாத நாகரிகம். வீடுகளில கொலலை பெரிதாக இலலாவிடில மிகத தொலலைதான. வீட்டுச் சாககடைகளைச சரிவரக் கழுவி, நாற்றம் இலலாமல் வைததுககொளவது வெகு கடினம்.

ஊரில பெரும் பாகம் உப்பு மண்ணுனதால், சில வீட்டுக் கிணறுகளிலதான் குடிககத தகுந்த தணணீர் கிடைக்கும். கயிறு கட்டிப் பாததிரஙகளை இறககிச் சேநதுவதுதான் வழக்கம். ஆனால கோடைககாலததிலும் தணணீா அதிக ஆழததுககுப போகாது. ராட்டினம் முதலிய வசதிகள அககாலததில வழஙகவிலலை. வலஙகைமான் தெருக்களில தென்னை முதலிய மரஙகளை வைததுப் பயிராககுவது அரிது. அதறகுத தகுந்த சாரம் பூமியில இலலை. காவேரிப் போககில அநேகமாய் எலலாக கிராமஙகளிலும், மரம் அடாந்து நிழல வசதி தெருககளில கிடைககும். இந்த விஷயததில எஙகளுககு அதிருஷ்டம் போதாது. இததகைய குறைகளால எலலோருககுமே கஷ்டம் இருந்தாலும், பெணபாலாகளுககு அதிகக கஷ்டம் என்று சொலலவும் வேணடுமா?

## நிலபுலன்கள்

வலங்கைமானில கொழுதத பணக்காராகளும் இல்லை; பெருதத மிராசுதாராகளும் இலலை, முககால் வாசி ஜனஙகளுக்குச சிறிய அளவு நிலபுலன்கள் இருககும். நன்செயயும் புன்செயயுமாகச் சோற்றுக்

கும துணிகளும் போதிய வரும்படி கிடைக்கும். நாற்பது வேலி, ஐம்பது வேலி அளவு சொததுள்ள கனவான்கள இருநதால அவர்களால பிழைப்பவரும், அவாகள செலவாககுககு அடஙகினவருமான மறறவா கள இருப்பாாகள. அபபடிக கையோஙகினவா நலல வராக இருந்துவிட்டால் ஊருக்கு எவவளவோ நனமை உணடு. அவருககுப் பொது நன்மையில கருதது இல்லாமல சிற்றினபஙகளிலும் வியாஜ்யஙகளில சொததுச சோககும் வழிகளிலும் மனம் போனால, ஊருககு அழிவு கைககணடதுதான. எஙகளூரில இப்படி நல வழியிலோ கெடட வழியிலோ எலலோரையும் கொணடு செலுதத வல்லவா இலலை. இதனால ஒரு பக்கம் நன்மை விளையும். பிறரைச சாாந்து இராமல தததம் காரியததைத தாமே நடததிககொளளும் தனமை ஏற்படும். மறறொரு பககம் தந்தலை யாடட மாக அவரவா பிரிந்துபோகக கிராமம் கெடடுலையும்.

பணடைச சம்பிரதாயததில, ஊருககுப் பொதுக் காரியஙகள் செயயச் சில குடும்பஙகள அமைந்து, ஒவவொரு தொழிலுககும், 'மான்யம்' என்று சில நிலஙகள ஒதுககபபடடிருககும். கிராமத தலைவர் களுககு அநதஸதும் குணமும் குறையக குறையத தொழிலாளாகள தஙகள வேலையைச சரிவரப பாாககா மல் இந்த மான்யங்களை இழந்து, 'அவா கடடிக கொணடு விடடார்; இவா கடடிககொணடு விடடார்' எனற புகாா தலைப்பட்டது. எனககு நினைவு தெரிந்து சில வருஷங்கள வரையில, ஆலயஙகளில பணிகள சரிவரச் செயயபபட்டு வந்தன. தினசரி பூஜையும் அந்த அந்தக காலங்களில் உத்ஸவஙகளும் நேரமையாக நிகழும். நாள் தோறும் ஆண பெணகள அநேகா சுவாமி தரிசனததிற்காகப போவது வழககம். திருப பணிகளும் அபபோதைககு அபபோது நடைபெறும். இவை எலலாம வரவரக குறைந்து போயவிடடன.

## திருவாதிரை உத்ஸவம்

எனக்கு நன்றாய இப்பொழுதும் ஞாபகத்தில் வருவது, சிவன கோவில திருவாதிரை உதஸவம். செவவந்திப் பூ மயந்தான! கீழே எலலாம் இறையும். கடும் வெபபமாக இருந்தாலும் பெரும் கூடடம கூடும். ஒரு பகதரைப பொறுககி எடுததுக கூறவேணடும். அவா நல்ல தொணடு கிழவா. சதை ஆடும். திருநீறு கனமாகப் பூசி இருப்பாா. கழுததில ஏக ருததிராக்ஷ மாலை; புஜததிலும் கடடியிருபபாா. தலையிலும் சிறிய குவியலாயக கடடியிருப்பாா. அவா விககிரகததின் முன்பாக வோவை வழிநதோட ஒரு காலைத தூககிக் கொணடே தாணடவம் ஆடுவாா ஒன்றும் அறியாத சிறுவாகளுக்கு வெறும் வேடிககையாக இருந்தும், அவா ஆகம முறைகளில கணடிருககிறபடியே நடிததாா என்று சொல்லக் கேளவி அவா காசி முதல் ராமேசு வரம் வரையில பெரிய உதஸவஙகள நிகழும் இடமெல லாம் போவாராம். வலஙகைமானைப் பொருடடாக நினைதது அவா ஈசுவர சேவை செயய வந்தது, அது ஒரு பெரிய க்ஷேத்திரமாகக கொணடாடப்பபடடது என்பதறகு அடையாளமாம்.

இது தவிர, பல தடவை அககிரகார வாசிகள் கூடுவது உணடு. அவைகளில சுபமானது ஒன்றையும் அசுபமானது ஒனறையும் இங்கே. விவரிககத துணி கிறேன்.

## ஆவணி அவிட்டம்

'ஆவணி அவிடடம்' வைதிக காரியஙகளில் பெரிதாயினும் அதை ஒரு முழககமாகக கொணடாடு வது கிராம வழககம். எஙகளூரில சுமார பத்துப் பன்னிரணடு குடும்பத்தாரே சாம வேதிகள். ருகவேதி கள் இன்னும் குறைவு. பாககி எலலோரும் கிருஷ்ண

யஜுர்வேதிகள். முற்றும் முடமானவரும், வியாதியால் படுத்த படுக்கையாய் இருப்பவரும், தீட்டால தடுக்கப் பட்டவரும் தவிர மற்ற ஆடவர் யாவரும் அதிகாலையில எழுந்து ஸ்நானம் செய்து, மற்ற நாட்களில இல்லாத சிரத்தையுடன் ஜப தபங்களைச் செய்வார்கள். வயசில முதிர்ந்தவர்கள், அன்று விசேஷம் முடியும் வரையில ஒன்றும் சாப்பிட மாட்டார்கள் மற்றவர்கள் பலகாரம் செய்வார்கள். ஏது காரணம் பற்றியோ அன்று எல்லா வீடுகளிலும இட்டிலியாகவே இருக்கும். எங்களுக்கு இந்தத் தின்பண்டத்தைப் புசிப்பது சிராவணச் சடங்குக்கு இன்றியமையாத அங்கம் என்று தோன்றும். வெண்மையாயும் மடியாயும் உள்ள வேஷ்டியை உடுத்துக்கொண்டு, மடிசஞ்சியில வீட்டிலுள்ள உயர்ந்த பட்டாடைகளைக் வைத்துக்கொள்ளுவார்கள். நாலைந்து பேர் உள்ள வீடுகளில இரண்டு மூன்று மடிசஞ்சிகள் உபயோகப்படும் சில பிரபுக்கள் விலை உயர்ந்தனவும், மேனியுள்ளனவுமான தம் வெண்பட்டு ஜோடிகளை வெளிப்படுத்துவார்கள் சுமார் ஒன்பது, ஒன்பதரை மணிக்குத் தெருக்களில ஒரு பரபரப்பைக் காணலாம். பிள்ளைகள் வீடு வீடாகப் போய், 'நேர மாய் விட்டதே! புறப்படுங்கள்; எல்லாரும் காத்திருக்கிறார்கள்' என்று மெதுவாய் இருப்பவர்களைத் துரிதப்படுத்துவார்கள்.

பத்து மணிக்கு ஒவ்வொருவர் கையிலும் பஞ்சபாத்திர உத்தரணியும் ஸதாலி உத்தரணியும இருக்கும். விசேஷமாய்ப் பாத்திரம செம்பாய் இருக்கும். சிலர் தங்கள் செலவத்தைக் காட்ட இவைகளை வெள்ளியால் வைத்திருப்பார்கள். பூணூல போடாத சிறுவர்களுக்குக் காரியம் இல்லாவிடினும, அவர்களே பட்டு வேஷ்டி, பாத்திரங்களுடன் முன நிற்பார்கள் தெற்குத் தெருவார் புறப்பட்டு, நடுத்தெருவார் வந்து சேரும் வரைக்கும கோடியில நிற்பார்கள். இவ் விருவரும் வடக்கு வீதியாருடன் சேர்ந்து திரண்டு குடமுருட்டி

ஆற்றங்கரைக்குப் போவார்கள் நூற்றைம்பது இரு நூறு பேர் கூடி அரை மைல் தூரம் போகும்போது கூச்சலும் விளையாட்டும் வெகு நேர்த்தியாக இருக்கும்.

எங்களூர் ஸ்நான கட்டம் விஸ்தாரமாய் இருக்கும். படித்துறை மூன்று உண்டு. ஒன்று ஆடவர்களுக்கும் ஒன்று பெண்டிர்களுக்கும் மற்றொன்று பிராம்மணர் அல்லாதார்களுக்கும் என்று பிரிவினை. அரசும் வேம்பும் நடுவில் கொண்ட பெரும் மேடையும், அதை ஒட்டி, 'ட' என்னும் எழுத்தைப் போன்ற பெரிய மண்டபமும் உண்டு.

அங்கே எல்லோரும் ஒன்று கூடியதும், வைதிகத் தொழிலால் பிழைக்கும் பிராம்மணர்கள் லௌகிகர்களிடம் சென்று ஒரு பஞ்சாதி சொல்லி ஒரு ஜோடி 'யஜ்ஞோப வீதம்' கொடுப்பார்கள். லௌகிகர்கள் அவைகளை வணக்கமாய்ப் பெற்று இரண்டணாத் தக்ஷிணை கொடுப்பார்கள். சிலர் அந்த யக்ஞோப வீதத்தையும் திருப்பி ஓர் அணாவையும் வைத்துக் கொடுப்பார்கள். இப்படிச் செய்பவர் கொஞ்சம் பேர்தான் இருப்பார்கள். பூணூல் தானம் செய்யும் வைதிகர்கள் அநேகர், சுற்றியுள்ள கிராமங்களுக்கும் போயிருப்பார்கள். அவர்களும் மண்டபத்துக்குச் சரியான வேளைக்கு வந்து சேர்ந்து விடுவார்கள். தத்தம் சிஷ்யர்களுடன் மூன்று நான்கு உபாத்தியாயர்கள் ஊரில் இருந்தாலும், அன்றைக்கு மட்டும் ஒருவரை முதல்வராக வைத்து எல்லோருமே அவருடைய சிஷ்யர்களாக நடந்துகொள்வது வழக்கம். வரவரத் தந்தலை யாட்டம் ஏற்படவே ஒருவருக்குள் மற்றொருவர் அடங்கும் முறை மறந்து, சிலர் தனிக் கோஷ்டியும் ஒவ்வொரு சமயம் கூட்டுவது உண்டு.

காமர் தொடங்கியதும் முக்கிய வாத்தியார் சங்கற்பம் சொல்லி வைப்பார். இதில்தான் அறியாப் பிள்ளைகள் தங்கள் குரலின் வலிமையைக் காட்ட உரக்கக்

கத்துவாாகள். ஏதோ அன்று ஜபிக்கும் மந்திரங்களில் அதுதான் உத்தமம் என்று வாலிபாகளுக்கு எண்ணம். அந்தச சஙகற்பம் என்பதில் கால தேசஙகளை வெகு நுடபமாயும் வேடிககையாயும் குறிப்பதும் தவிர; பாபஙகள வரிசையாய அடுககி இருக்கும். அதில, செய்த பாபம், செயயாத பாபம், உடலால செயயும் பாபம், மனசால செயயும் பாபம்-இவைகளைச சொல லும்போது, என்ன யுகதி செயதாலும் நினைக்கவே முடியாத சில பாபஙகளையும் கணிப்பாாகள. அது ஆன பிறகு, ஸ்நானமும் தாபபணமும் நடைபெறும. எல் லோரும் மந்திரத்துடன் புதுப் பூணூல்' அணிவார்கள். கொணடுவந்த உயாந்த வஸதிரஙகளுககெலலாம் இச் சமயந்தான் உபயோகம். இது ஆனதும் ஆவணி யவிடடத்தின் இணை பிரியாத ப்ாஙகு ஒன்று நிகழும். சின்னவாகள் மூததவாகளைத தேடி, ஸாஷடாங்க நமஸ்காரம் செயது, 'அபிவாதயே' எனறு தம் கோததிரம், சாகை, சாமா எலலாவற்றையும் தெரிவிப் பாாகள. இதனல் சிறுவாகளுக்குத தேக சிரமம் அதிகம். வயது ஏற ஏறச் சிரமம் குன்றும் கிழவா கள தஙகளையும்விடக கிழவாகளைத தேடுவது, பாாகக விநோதமாகவே இருககும். அபபொழுததான் அவா கள பிறந்த நாளை மறைககாது சொல்லுவாாகள. இந்தப் பணிவு எவவளவு திமிருடையவனும் செயதே தீரவேணடும். இது எவவளவு முக்கியம் என்பதற்கு அததாடசியாக, சாதாரணப் பேசசு முறையில, 'மிகவும் தணிந்து விடடான, சரணுகதி செயதான்' எனபதற்கு, 'ஆவணியவிடடம் பணணிவிடடான்' என்று சொல் வது உணடு.

உடனே அககினி வளாத்து உபாத்தியாயா ஹோமததிற்கு ஏற்பாடு செயவாா. பணடைக கிராம வழககம் தெரிந்தவாகள அரிசி, தேஙகாய, பழம், பாககு வெறறிலை இவைகளை அவரிடம் சோப்பிபபாாகள. ஜாககிரதையாய் உள்ளவாகள சின்னச சவுககததைப்

போட்டு அதன் மேல் உடகாருவாாகள். அக்கினியை வளாதது ஹோமம் செயய ஆரம்பிதது, வேதாத்தி யயனம், சாஸதிர பாடம் சொலலி வைபபாாகள். அப் பொழுதும் பையன்கள கூககுரல போடுவாாகள். ஆனால சஙகவபததிறகு உதவிய புதுத தொணடை இலலாததால, அவவளவு தூரம கேடகாது. இந்தச சிடசை ஆன பிறகு, இளம் பசிககாரா சிலா, 'இன்னும் ஆகவிலலையா? சீககிரம் ஐயா!' என்று உபாததியா யரை அவசரபபடுததுவாாகள. அவரும், 'இதோ ஆயவிடடது, இதோ ஆயவிடடது' என்று ஓடுவாா. நிகழ்சசி முடிந்ததெனபதறகு அடையாளம், வந்த தேஙகாய உடைபடடுச சாககளை, கற்கணடு, பழத துடன - உபாததியாயா சிஷயகோடிகளுக்கு அடசதை தலையில போடடதும் - கொடுபபடுவதுதான. பலமுளள குழந்தைகளுககு இரடடிப்புப பாகம கிடைககும். சில தளளாத பிளளைகளுககு ஒன்றுமே கிடைககாமல போவ தும் உணடு. இந்தச சநதாப்பததில உபாததியாயருககு ஸம்மானம் சோகக வேணடி, மஙகளகரமாயக குஙகும அடசதையுடன விளஙகும்-உபாததியாயரைச சோநத- ஒருவா, பெரிய தாம்பாளததோடு சிஷய கோடிகள இருககுமிடமெலலாம் போவாா. நிாப்பந்தம் ஒன்றும் இலலாமலே அவரவா நிலைககு ஏற்பத தக்ஷிணை போடு வாாகள; முழு ரூபாயகள சில இருககும்; அரை, கால, அரைககால விசேஷமாக இருககும்; ஜாஸ்தி செபபுக காசுதான். ஒரு குடுமபககாராாவது ஒன்றும் கொடாமல ஏமாற்றிவிடமாடடாா. இவ விஷயததில தவறினால, பாபமும் மானககேடும் உணடு என்ற உறுதியான கொளகை யாவருககும உணடு

கிராமததிறகுத திரும்ப வேணடிய வேளை வந்ததும் அவரவா ஈர வேஷடி, மடிசஞ்சியைச சேகரிதது ஊா வலம் நோாய்க நூடுவதறகாக, 'அவரெஙகே? இவரெஙகே?' என்று ஒருவருககொருவா அழைப பாாகள. உபாததியாயா மடடும் கொஞ்சம பின்

தயகுவார்! அரிசி, தேங்காய எலலாம் மூடடை கடடுவ தில ஒரு கண இருகக, மற்றொரு கணணில தக்க தொகை ஸம்பாவனையாகக கிடைககவிலலை என்று சில பெரியோாகளுடன் குறை கூறுவார். அப்பொழுது கிருகஸதாகளில சிலா, தங்களுககாகக காககவிலலை என்றும், தஙகளைச சரியானபடி விசாரிககவிலலை என்றும், வரவரக கிராம மரியாதை எல்லாம் அழிந்து போகிறது என்றும் முறையிடுவாாகள எபபடியோ தகராறு எலலாம தீாந்து கூடடம் திரும்பும்பொழுது, வைதிகாகளும் அவாகள சிஷ்யாகளும் சோநது, கணீ ரென்று பஞ்சாதி சொலவதைக கேடக வெகு ஆனநதமாய இருக்கும். ஒருவரும் முநதி ஓடி விட மாட்டாாகள. வடககு வீதி ஜனஙகள திருமபும் பொழுது மற்றவா நின்று, 'க்ஷேமமாயப் போய் வாருஙகள க்ஷேமமாயப போய வாருங்கள்' என்று அழகாய விடை கொடுப்பாாகள். அப்படியே நடுத தெரு மூலையிலும் நடைபெறும். என் வீடு தெற் குத தெரு மையததில் இருந்ததால, நான வீடடில நுழையுமபோது சிலரே பாககி இருப்பாாகள். சுமஙகலி யாராவது மஞ்சள நீா சுற்றிக கொடடிய பிறகுதான உளளே நுழைவது வழககம். மணி இரணடு ஆகி இருககும். கை, கால, முகம எலலா வற்றையும் அலம்பியதும், தாய, தமககை, மதனி முதலிய ஸதிரீகளுககு நமஸகாரம் செயவாாகள; கோததிரம், வேதம், சாமா இவைகளைச சொலவதிலலை இம் மரியாதை பெறுவதில் அவாகளுககு மெதத சந்தோஷம் செயயத தவறினால வெகு காலம் மனததில வைததிருநது, வேறு குறைகள் ஏற்படட பொழுது, 'ஆவணி யவிடடததிற்குககூட ஒரு நமஸ காரம் கறிப்பாயக கிடநதது!' என்று வருததபபடடு, நம்மையும் துன்பபபடுததுவாாகள. 'மஹா ராஜனாய வெகு காலம் நன்றாய இருகக வேணடும்' என்று அவாகள வாழ்ததுவது திருபதியாய இருககும்.

எனக்கு ஒரு சந்தேகம் நெடுநாளாக இருக்கிறது. அதை யாராகிலும் தீர்த்தால் நலம். வங்காளம், ஐக்கிய மாகாணம், பம்பாய் இங்கெல்லாம் நமஸ்கரிக்கும் போது பெரியவரது கால்களைத் தொடுவதும், தொட்டுக் கையைக் கண்ணில் ஒற்றிக்கொள்வதும் இக்காலத்தில் கூட வழக்கம். நம் தமிழ் நாட்டில் மட்டும் இது நின்றுவிட்டது. இதேன்? சிலர் நாகரிகம் ஓங்கினதால் என்பர்; அளவைக் கடந்து மடி யென்று கொண்டாடும் ஆசாரத்தாலென்று நான் நினைக்கிறேன். ஒருவரை ஒருவர் தொட்டாற் கூட, பரிசுத்தி போய்விட்டதென்று சிலர் தமிழ் நாட்டில் சொல்கிறார்கள். புருஷர்கள், பெண்டிர்களைப்போல அவ்வளவு கவலைப்படுவதில்லை. இந்தக் கதை நிற்க.

நமஸ்காரம் முடிந்ததும் விசேஷத்திற்குக் கட்டிய பட்டை அவிழ்த்துத் தினப்படி வேஷ்டியை உடுத்துச் சாப்பிட உட்காருவார்கள். 'ஆவணி யவிட்டத்திற்கு அசடியும் சமைப்பாள்' என்றபடி, அன்று சாகங்களும் சுவைப் பண்டங்களும் அதிகமாயத் தயாரா யிருக்கும். புருஷர்கள் எழுந்த பிறகு உடனே இலையெடுத்துப் பசுவின் சாணி போட்டுச் சுத்தப்படுத்துவார்கள். சில இலைகளை மட்டும் வைத்திருப்பார்கள். கணவன்மார் கலத்தில் சாப்பிட வேண்டுவது பெண்டிருக் குரிய கடமை. விசேஷ நாட்களில், இந்த ஒழுக்கத்தைக் கட்டாயம் பின்பற்ற வேண்டும். பதார்த்தங்கள் மூன்றரை மணி, நான்கு மணிக்கு நன்றா யிருக்குமா? ஆறி அவலாயப் போயிருக்கும் நல்ல தின்பண்டங்கள் குறைவாய இருக்கும்; இல்லாமலும் போகும். புருஷர்கள் நன்றாயப் புசித்தார்களே என்கிற பெருமை மேலிட்டு, தங்களுக்குப் பூஜ்யமாய் விட்டதே என்று பெண்டுகள் கொஞ்சமாயினும் வருந்தார்கள். ஊர் வம்பைக் கொட்டி அளந்துகொண்டு, நாக்கை நப்புக்கொட்டி, காலை மாற்றி மாற்றி அவர்கள் உண்பதை வேடிக்கை யாகக் பையன்கள் ஆசைப்படுவார்கள்.

## சாவுக் கூட்டம்

தெருவில் ஓர் அகத்தில் சாவு நேர்ந்தால் பந்துக்களும் தெருவாரும் கூடுவார்கள். ஸ்திரீகளும் கைக்காரியத்தை விரைவாய் முடித்துவிட்டுப் போவார்கள். இந்த நாளை விட முன்னெல்லாம் ரோதனம் மிகுதி. பெண்டிர் மாரில் அடித்துக்கொண்டு அழுவதும், சிட்டையாய்ப் 'புலாக் கணம்' பாடுவதும், ஒருவரை ஒருவர் அணைந்து துக்கம் கொண்டாடுவதும் பார்க்க வியப்பாக இருக்கும். பிணத்தை எடுத்துப் போன பிறகுதான் ஸ்நானம் பண்ணி அவரவர் காரியத்தைப் பார்ப்பார்கள். பலர் மயானத்திற்கும் போவார்கள். முன்னால் புருஷரும், பின்னால் கைகோத்து உரக்க அழுதுகொண்டு பெண்டிரும் போவார்கள் இறந்தவர் புருஷனாயிருந்து, பெண்சாதியும் இருந்தால் அவளையும் ஒரு விதவை, பக்கத்தில் கட்டிக்கொண்டு அலறிக்கொண்டு போவாள்.

வலங்கைமானில் சுடுகாடு ஆற்றின் படித்துறைக்கும் கிழக்கே கால் மைல் தூரம் இருக்கும். பெண்டுகளும் பாலர்களும் படித்துறையில் தங்கிவிடுவார்கள். பிணத்திற்கு நெருப்புப் போட்டு, புகையைக் கண்ட பிறகுதான் ஸ்நானம் செய்வார்கள். இதில் ஒரு விசித்திரம். மாண்டவர் சிறுவராய் இருந்தால், துக்கம் அசாத்தியமாய் இருந்தாலும், வெளி முழக்கம் எல்லாம் குன்றும்; செலவு அதிகப்படாது. சடங்குகளை அசட்டை செய்வார்கள். 'ஏன் இப்படி? இவர் ஆன்மா நல்ல கதியை அடைய வேண்டாமா?' என்றால், 'யார் அற்பாயுசாய்ப் போகச் சொன்னார்?' என்று நிர்தாக்ஷிண்யமாய்ப் பேசுவார்கள். போனவர்கள் பேரில் கோபமா? ஏதோ ஒரு தாழ்ந்த சம்பிரதாயம் உண்டாகி அதையே வளர்த்து வருகிறார்கள். கிழப் பிணம் விழுந்தாலோ, கல்யாணமென்று சொல்லி எல்லா முறைகளையும் விரிவாய் நடத்துவார்கள். புலாக் கணம், அடிபுடை,

கூட்டம், செலவு, வைதிக அநுஷ்டானம், பேரப்பிள்ளை களை நெய்ப்பந்தம் பிடிப்பது, எல்லாம் கூடிய அளவு விரியும்.

என்னுடைய ஒன்பதாம் பிராயத்தில், சேஷப் பையர் என்று எண்பது வயசான கிழவர் ஒருவர் மாண்டார். சுற்றுவட்டக் கிராமங்களிலிருந்து பந்துக்களும் மித்திரர்களும் ஊரில் உள்ள ஜனங்கள் எல்லோருமே பெருங் கூட்டம் கூடினார்கள். மூன்றில் ஒரு பாகம் பெண்பாலார் படித்துறைக்குப் போகும்போது, சூரியாஸ்தமனம் ஆகிவிட்டது. மண்டபம், மேடை எல்லாம் நிறைந்து ஒரே சந்தடியாய் இருந்தது. திடீரென்று, நடுக்கூட்டத்தில் இரு பெண்கள் ஜோடியாய் நின்று என்ன் என்னவோ சத்தங்கள் போட்டு, விகாரமாய்க் குதித்து, முகம் கண் வாய் எல்லாவற்றையும் கோணங்கி பண்ணிக்கொண்டு, அழுவதுபோல் பார்க்கிறவர் சிரிக்கக் கூத்தடித்தார்கள். என் போன்ற சிறுவர்களுக்கு ஒரு பக்கம் வேடிக்கையாய் இருந்தாலும் பயம் அதிகப் பட்டது. முறை அறிந்த சில பெரியவர்கள், 'இப்படிச் செய்வது பிராம்மண ஜாதியின் வழக்கமல்ல' என்று கூடிய வரையில் சொல்லிப் பார்த்தார்கள். வேடிக்கை பார்ப்போர், 'நடக்கட்டும், கலியாணந்தானே?' என்று மேலும் கிளப்பிவிட்டார்கள். அவ்விரண்டு ஸ்திரீகளில் ஒருவர் எனக்கு நெருங்கிய பந்து வாதலால் துணிந்து, 'இந்தக் கோரம் எதற்கு?' என்றேன். 'இப்படி எல்லாம் வேடிக்கை பண்ணினால்தான், உங்கள் பயம் நீங்கிக் களிப்பீர்கள்' என்றார் அவர் எனக்கு மட்டும் பயமும் நீங்கவில்லை; களிப்பும் உண்டாகவில்லை. இத்தகைய கோலத்தை நான் வேறு ஒரு சமயமும் பார்க்கவில்லை.

## குழந்தைகள் விளையாட்டு

தெருவில் குழந்தைகள் விளையாடுவதைச் சற்றுக் கவனிக்கலாம். பெண் குழந்தைகள் பாண்டி, நொண்டி,

கண்ணுமூச்சி என்று நாலைந்து பேருக்கு மேற்படாமல், ஆங்காங்கு வேடிக்கையாய்ப் பொழுதுபோக்குவார்கள். ஆண் பிள்ளைகள் கோலி, பிள்ளையார்ப் பந்து, கிட்டிப் பந்து, உப்புக் கோடு என்பவற்றிலும், மற்றும் உள்ள ஆட்டங்களிலும் ஈடுபடுவார்கள். கிட்டிப்புள் என்பது இந்தியாவில் அநேக பாகங்களில் அநாதி காலமாய் வழங்கி வருகிறது. பெரியவர்கள் சங்கராந்தி ஒரு நாள் தான் வெளியில் வந்து, பந்தாட்டத்தில் எங்களுடன் கலந்து ஆளுக்கு ஓர் அடி இரண்டடி கிட்டியால் அடித்து விட்டுப் போவார்கள். 'இது ஏதோ புராதன வழக்கம்; வழுவக்கூடாது' என்பார்கள்.

## சீட்டாட்டம்

வலங்கைமானில் படிப்பில்லாத குமாரர்கள் அதிகம். ஆனதால் சீட்டாட்டம் பலம். சில வீட்டு வெளித் திண்ணைகளுக்குத்தான் இந்தப் பாக்கியம் உண்டு. பெரும்பாலும் ஐந்து பேர், 'பிடி ஆட்டம்' ஆடு வார்கள். சுற்றி ஏழு எட்டுப் பேர் வேடிக்கை பார்ப் பார்கள். ஆட்டத்தில் சண்டை வந்து கூச்சல் பலக்கும் போது இவர்களும் சேர்ந்து கொள்ளுவார்கள். யாரை யாவது சனி ததால பக்கத்திலிருந்து பார்ப்பவர் தோஷம் என்று எண்ணி, அவரைப், 'போ, போ' என்று விலக்குவார்கள். ஆட்டம் தோல்வி அடைந்தாலும் தப்பாட்டம் தலையில் சுமந்தாலும், 'பேஸ்து' என்று பெயர். அபராதம் கொடுக்க வேண்டும். மறு ஆட்டம் ஜயித்தால் தப்பினார்கள். சிலருக்குப் பொல்லாத வேளை யால் மூன்று பேஸ்துச் சுமந்துவிடும். அப்பொழுது அவர்கள் திருமுகத்தைப் பார்க்கவே முடியாது 'மூணும் பேஸ்து வைத்தவர் முகம்போல!' என்றுதான் உபமானம் இருக்கிறதே!

சிலருக்கு இந்த ஆட்டத்தில் வெகு கூர்மையான ஊக்கம் இருக்கும். இரண்டு மூன்று பிடி ஆனதுமே,

இன்னார் கை இப்படி என்று அறிந்துகொள்ளுவார்கள். அவர்கள் ஒருவர் பேரில் தப்பாட்டம் கட்டுவதற்காகக் கட்சி சொல்லுவதைக் கேட்டால், வெகு ஆச்சரியமாய் இருக்கும். நன்றாய்ப் பழக்கம் ஆன பிறகுங்கூட எனக்கு அந்தக் கட்சிகள் புலப்படுவதில்லை. முன்னாளில் 'அவுட்' என்று ஓர் ஆட்டம் உண்டு; இரண்டு பேர் ஆடுவது. இதில் சிலருக்கு அற்புதமான தேர்ச்சி உண்டு. வலங்கைமானில் நாலைந்து பேர் இதே அலுவலாய் ஆடி நஷ்டப்பட்டனர்.

ஒரு தடவை ஊரில் ஒரு பெரிய கல்யாணம் நேர்ந்து, அநேக கிராமங்களிலிருந்து சீட்டில் தேட்டையானவர்கள் வந்திருந்தார்கள். ஒரு கச்சேரி, முதலதரமான பேர்வழிகள் சேர்ந்திருந்தமையால், நானும் சாப்பாட்டைக்கூடக் கவனியாமல் வேடிக்கை பார்த்து வந்தேன். அதில் எங்களூர்ப் புலிஞ்சிக் கோமல் சிங்கம் ஒன்று ஜயித்துவிட்டது. எனக்கு அவரிடம் இருந்த மோகத்தை இன்னதென்று குறிக்க முடியாது. அவர் கைச் சீட்டைப் பார்ப்பதிலும், அவர் பேச்சைக் கேட்பதிலும், அவருடன் கூட அங்கும் இங்கும் போவதிலும் பைத்தியம் பிடித்து, அவர் கோமலுக்குத் திரும்பும் பொழுது துக்கக் கடலில் முழுகினேன்.

இந்தச் சீட்டுப் பிசாசு, கிழவர்களையும் ஆட்டி வைக்கும். காசு அகப்படாததால் புதுக்கட்டு வாங்க முடியாது. தேசை என்று சொல்லிக்கொண்டே ஒன்றோடு ஒன்று பிரிக்க முடியாமல் ஒட்டிக்கொண்டிருக்கும் சீட்டைக் குனிந்து உற்றுப் பார்த்து, கறுப்பு சிவப்புத் தெரிந்தும் தெரியாததுமாய், சண்டை விபரீதமாய்ப் போட்டு விளையாடுவார்கள். அவர்கள் பேசிக்கொள்வதைக் கேட்க வெட்கமாக இருக்கும். எத்தனை வயசாயினும், கேவலம் இழிவான கெட்ட வார்த்தை சொல்வர். தாய், பெண்சாதி, கூடப் பிறந்தவர், எல்லோர் கற்பையும் அழிக்க நாக்குக் கூசாது.

கற்பை அழிக்கும் திருட்டு மாப்பிள்ளைகளோ கீழ்ஜாதியார்; ஒவ்வொரு வேளையில் நாலு கால் மிருகங்களையும் அழைப்பார்கள். இந்த மானக்கேடான வழக்கம் மற்ற இடங்களைவிடத் தஞ்சாவூர் ஜில்லாவில் மிகுதி. 'புழுத்த நாய் குறுக்கே போகாது' என்பர். பெரும் படிப்புப் படித்துப் பட்டண வாசம் செய்யும் தஞ்சாவூராருங்கூட முற்றும் மறக்க முடியாது. எவ்வளவோ ஜாக்கிரதையாய் இருப்பினும், தான் சுயாதீனமாயும் கூட்டுடனும் பேசும்பொழுது நண்பர்கள் கேட்டிருப்பார்கள். நினைக்க அங்கமெல்லாம் சுருங்குகிறது. பால்ய சகவாசம் மாறாது.

## கல்யாண சம்பிரமங்கள்

ஹிந்துக்கள் நாலாயிரம் வருஷமாய்த் தொன்று தொட்டு வரும் முறைகளை விட்டு வழுவ மாட்டார்கள் என்ற ஓர் அபிப்பிராயம் எங்கும் பரவி நிற்கிறது. இது வெளிப் பார்வைக்குத்தான் சரி. ஊன்றிக் கவனித்தால் முக்கியாம்சங்களிலும் வேற்றுமைகள் பல அகப்படும். விவாக வழக்கங்களைக் கொண்டே இந்த உண்மையை அறியலாம். முன்போல், ஜாதியையாவது, அதன் உட்பிரிவையாவது இப்போதெல்லாம் கவனிப்பதில்லை. நாற்பது வருஷத்துக்கு முன் வடமர்களுக்குள் சோழ தேசத்தார், வட தேசத்தார் என்கிற பேதம் பலமாக இருந்தது. பிருகத் சரணத்தாரில் அவாந்தர வித்தியாசங்களை ஊன்றிப் பார்ப்பது உண்டு. அதிக தூரத்திலாவது, நன்றாய்த் தெரியாத குடும்பங்களிலாவது, கொள்வினை கொடுப்பனை செய்யமாட்டார்கள். ஜாதகம் பார்ப்பது இப்பொழுதும் அதிகமே. முன் நாட்களில் இதற்கும் பதின் மடங்கு இருக்கும். கல்யாணங்களுக்குப் பெரும்பாலும் நேரில்தான் அழைக்க வேண்டும். ஆள் கையில் ஓலைச் செய்தி அனுப்புவதையும் கண்டிருக்கிறேன்.

## பயணம் போவது

கூட்டமாய்க் கட்டை வண்டியில் மூன்று நாள் பயணங்கூட்டப் போவார்கள். நெருக்கி உட்கார்ந்தாலும் கூட எல்லாருக்கும் இடம் இராது. மாற்றி மாற்றிக் கொஞ்ச தூரம் சிலர், கொஞ்ச தூரம் வேறு சிலர் என்று பிரித்துக்கொள்வார்கள். பெண்டுகளுக்கும் சிறு குழந்தைகளுக்கும் வேறு வண்டிகள்; புருஷர்களுக்கு வேறு வண்டிகள் உண்டு. இரண்டும் கெட்டான் என்கிற வயசுப் பையன்கள் அங்கும் இங்குமாயச் சௌகரியம்போல் சேர்ந்துகொள்வார்கள். வாய்க்கால், பள்ளம், மேடு முதலிய இடையூறுகள் நேர்ந்தால், மாடும் வண்டிக்காரனும் நிர்வாகிகளான புருஷர்களும் படும்பாடு அதிகமாக இருக்கும். சிலர், 'நமக்கு என்ன?' என்று உதாசீனமாய் அதைப் பார்க்காதவர்போல் நழுவுவார்கள். திருட்டுப் பயம் உண்டு. இதற்காகப் பெண்டுகளும் குழந்தைகளும் நகை போடாமல் வருவார்களா! மேலே நகை மிகுதியாக இருக்க இருக்க, உள்ளே நெருப்பைக் கட்டிக்கொண்டிருப்பார்கள். இருட்டினதும் பலமுள்ள புருஷர்களில், முந்திச் சிலரும் வண்டியை ஒட்டிச் சிலரும் பின்னால் சிலருமாகப் பார்த்துக் காப்பார்கள். குளத்தங் கரையைக் கண்டதும் சிறுவருக்கெல்லாம் பசியும் தாகமும் தாங்கவே முடியாது. தோசைக்கும் இட்டிலிக்கும் புளியஞ் சாதத்துக்கும் தயிர்ச் சாதத்துக்கும் மன்றுடுவது வேடிக்கையாக இருக்கும். மிளகாய்ப் பொடியும் வேப்பிலைக் கட்டியும் வெல்லம்பட்ட பாடு படும். சிறுமிகள் தாம்பூலம் போட்டு 'உன் நாக்கு அதிகச் சிவப்பா, என் நாக்கு அதிகச் சிவப்பா?' என்று நாக்கை நீட்டிக் கண்ணைக் குறுக்கிப் பார்ப்பதும், புல்லாக்கை நக்குவதும் போட்டோ பிடித்தால் வெகு ஆச்சரியமாக இருக்கும்.

கல்யாண ஊர் சேர்ந்த பிறகு சம்பந்திகளுடன் சிநேகம் கொண்டாடுவதும், அற்பக் காரியங்களுக்கும்

சண்டை போடுவதும் வருணித்து அளவிட முடியாது. வரதட்சிணை என்பது அப்பொழுதும் உண்டு. ஐயாயிரம், பத்தாயிரம் என்பது இல்லவே இல்லை. நூற்றுக் கணக்கில்தான் 'இருக்கும் 'கன்யா தானம்' என்பது சாஸ்திரங்களில் சொன்னபடி சுத்தமாக நடப்பது அப்பொழுதும் அரிதுதான். இதற்கு எதிரான கொள்கையும் ஒன்று உண்டாம். எங்கள் அகத்திலேயே ஓர் உதாரணம் கேட்டிருக்கிறேன் என் தகப்பனார் விவாக காலத்தில், அவர் தகப்பனார் தம் சம்பந்தியிடம் ராத்திரி ரகசியமாய் ஐம்பது ரூபாய் கொடுத்தாராம். அவர், தாம் கன்யாதானமாக நடத்த வேண்டுமென்று வெகு நாளாய் வைத்திருந்த ஆசை பங்கமாகக் கூடா தென்று வெகுவாய் ஆக்ஷேபித்தார். 'தாம சாஸ்திரங் களில் என்ன எழுதியிருந்தாலும், சுற்றியுள்ள ஜனங் கள், 'பெண்ணைக் கொள்வது' என்றுதான் விவகரிக்கிறார் கள். கொண்ட பொருளுக்கு ஏதாகிலும் விலை கொடுக்காவிடில் அது நம் வீடு வந்து க்ஷேமத்தைத் தராது என்ற நெடு நாளைய அநுபவத்தை ஒட்டி நீங்கள் இதைப் பெற்றுக்கொண்டே ஆகவேண்டும்' என்று இவர் வற்புறுத்தினார்.

## சாப்பாட்டு விஷயம்

இப்பொழுதுங்கூடச் சாப்பாட்டுக்கு அழைப்பதும் சாப்பாட்டுக்குப் போவதும் நமக்குள் நாகரிகத் துக்கும் சௌகரியத்துக்கும் ஏற்ப இருக்கின்றன என்று சொல்ல முடியாது. கிராம வாசங்களில் அதுவும் பழைய நாளில், பெண் வீட்டுக்காரனுக்குக் கவலையும் தொந்தரவும் அதிகம் ஆக வேண்டும் என்பதுதான் எல்லாருக்கும் நோக்கம். காலையில் ஒரு முறை ஊரில் உள்ளோரை யெல்லாம் பிள்ளைகளும் பெண்களும் சாப்பாட்டுக்குக் கட்டாயம் வர வேண்டுமென்று அழைப்பார்கள். ஆனால் இது போதாது. மறுபடியும்

சாப்பாட்டு வேளையில் அழைக்காவிட்டால் சரிப்படாது. புருஷர்களுக்குப் புருஷர், பெண்டுகளுக்குப் பெண்கள் போய்த்தான் ஆகவேண்டும். நிழல் இல்லாத வலங்கை மானில உப்பு மண் நிறைந்த நாலைந்து தெருவுக்கும், அழைக்கும் குழந்தைகள் ஓடுங்கி ஓடுங்கி ஓடுவதைப் பார்த்தால், 'ஏன் இந்தச் சங்கடம்?' என்றுதான் தோன்றும்.

இந்தச் சாப்பாட்டு விஷயத்தில் உள்ளதுபோல் தான் மற்ற விஷயங்களிலும் இருக்கும். ஒரு தடவை ருதுசாந்தி முகூர்த்தம் நடந்தது. ஆசீர்வாதத்திற்கு அட்சதை கொடுத்ததும் பெரியவர் ஒருவர் வாத்தியாரை அழைத்து, 'நிறுத்தும்!' என்று அதட்டிச் சொல்லி ஒரு விவாதத்தைக் கிளப்பினார். இதற்கு அடுத்த வேறு வீட்டில் முன் நடந்த ஒரு கல்யாணத் தில் கிராம வழக்கத்துக்கு நேர் விரோதமாகச் சம்பா வனை விஷயத்தில் தவறுதல் நேர்ந்ததாகச் சொல்லி, 'அதற்கு யார் ஜவாப்தாரி? என்ன ஜவாப்?' என்று கேள்வி போட்டார். என்ன சமாதானம் சொல்லியும் கேட்கவில்லை 'லக்னம் வந்துவிட்டது. தயவு செய்ய வேண்டும்' என்று நயந்து கூறியும் பலிக்கவில்லை. கூச்சல் அதிகமாகிவிட்டது. கடைசியில் இதற்கு வேறு வழியில்லை என்று சிலர் ஒருமிக்கப் பேசிக்கொண்டு வெளியே போய்விட்டார்கள். மணையில் பிள்ளையும் பெண்ணும், வாத்தியாரும் சண்டைக்காரப் பெரிய வருமே பாக்கி இனி வழியில்லை என்று அவரும் ஒதுங்க, அவசியமானவர்கள் ஒவ்வொருவராய்த் திரும்பி வந்த பிறகு முகூர்த்தம் காலம் தவறி நடைபெற்றது.

## கிராமத்துப் பெண்கள்

இனி ஸ்திரீகளைப் பற்றி ஒரு பாகம் எழுதி, இந்தக் கட்டுரையை முடிக்க வேண்டும். தென்னிந்தி யாவில், 'கோஷா' என்னும் ஆசாரிகம் இல்லாவிடினும் .

அமெரிக்கா, இங்கிலாந்து, பிரான்ஸ் ஆகிய தேசங்களில் பெண்பாலர்களுக்கு உள்ள படிப்பும் உரிமைகளும், புருஷர்களுக்குச் சமானமாகப் பழகும் சுயாதீனமும் நம்முடைய சகோதரிகளுக்குக் கிடைக்க இன்னும் எவ்வளவோ காலம் பிடிக்கும். அறுபது ஆண்டுகளுக்கு முன் வலங்கைமானில் அவர்கள் நிலைமை எப்படி இருந்திருக்கும்? ஸ்திரீகளைப்பற்றி நம் நூலாசிரியர்கள் உள்ளதை உள்ளபடி அறிவார்களா? அதற்கு எவ்வளவு நெருங்கிப் பழக வேண்டும்? புருஷர்களுடைய அந்தரங்க பாவங்களையும் உத்தேசங்களையும் சுக துக்கங்களையும் உள்ளது உள்ளபடியே வருணிக்க முடியுமே. எட்டு ஒன்பது பிராயமானதும் இரு பாலாரையும் பிரித்துவிடுகிறோம். விளையாட்டு வேறு; கூட்டம் வேறு; கற்கும் கலை வேறு; செய்யும் வேலை வேறு; ஆசாரம் வேறு; பேசும் பேச்சுக்கூட அநேக அம்சங்களில் வேறு. நம் உத்தியோக நிகழ்ச்சிகளும் வாழ்க்கையின் பெரும் போக்குக்களும் துயரங்களும் ஆசைகளும் முற்றும் அவர்களுக்குத் தெரியாதவை. நம்முடன் அவர்கள் இந்த முக்கியமான விஷயங்களில் கலந்து சரி சமானமாய்ச் சம்பாஷித்து, உதவி, வாழ்க்கைப் பங்காளிகள் என்று நினைக்கக்கூடிய நிலையை இன்னும் அடையவில்லை. வீட்டுக் காரியங்களுக்கு அவசியமான அளவுதான் அவர்களோடு பேசுவதும் கொண்டாடுவதும் இருக்கின்றன. ஆடவர் எழுதும் புஸ்தகங்களில் பெண்களைப் பற்றிய கருத்துக்கள் தத்துவமாக இருக்க மாட்டா.

எங்களூரில பையன்களுக்கே நல்ல பள்ளி இல்லை என்று சொல்லியிருக்கிறேன். பெண்களுக்குச் சொல்ல வேண்டுமா! படித்த பெண்களும் இல்லை; படிக்க வேண்டும் என்கிற அவா உள்ள பெண்களும் இல்லை. பாட்டுக் கொஞ்சம் கற்பார்கள். அதுவும் பெரும்பாலும் கேள்வியால் வந்ததாக இருக்கும். உட்கார்ந்து ஒழுங்காக ஒருவர் சொல்லிவைப்பது என்பது இல்லை.

கௌரீ கலயாணம், ஊஞ்சல, நலஙகு, குதித்துப் பாடு வது - இந்தச சந்தாப்பஙகளுககுத தககு பாடடுககளை மடடும் தெரிந்துகொளவாாகள. அம்மானை, கோலாட டம், பலலாஙகுழி, நாலு மூலைத தாசசி, பாணடி, ஓடடி, சோழி—இவைகளே ஆடடஙகள. பெரிய சம்சாரங் களில இவற்றிறகுககூட நேரம் அகப்படாது. தாயககுச் சிறிய பணிவிடைகள செயய வேணடி இருககும். குழந்தையை எடுதது வைததுககொளவதும் அசுததங் களை எடுபபதும் வீடு கூடடுவதும் அடுதத வீடு, அணடை வீடடுககுச சிறிய தூதுகள செலலுவதும் சாமானகள கடன் கொடுப்பதும் வாஙகுவதும் அவா கள பொழுதை எலலாம் போககிவிடும். சிறிய சமை யலுஙகூடச சமாளிகக வேணடும. இந்தச சுற்றுக் காரியஙகளுககுப் பெணகள் அவசியமாதலாலதான, 'சமுததி தலைசசன் பெணணைப் பெற்றுளாம்' எனகிற வசனம் வழங்குகிறது.

பதது வயசிற்குள் விவாகம் ஆகவேணடும். அதற்கு முனனால இந்தச சிடசை ஆகவேணடும். ஆகாவிடில தாயககுப் பெரும் கவலை. "வருகிற வருஷம புககுகம் போகவேணுமே! நீ எப்படிததான குபபை கொடடப் போகிறாயோ?" எனறு பலலைக் கடிததுககொணடு கன்னததில இடிப்பாள.

அந்த நாளில, குழந்தைகளுக்குச சொரி, சிறஙகு, அம்மை முதலிய நோயகள அதிகம். வைததியம் மடடு. சுகாதார வழி ஒன்றுமே தெரியாது. நலல அகஙகளில கூடப பெணகள தலைமயிரில பேன இருககும் வெளி யில உடகாாந்து பேனை எடுததுச சொடுககுவது அரி தலல. நான் பாாததிருககிறேன்.

எடடாவது வயசிலேயே மாபபிளளை தேடத் தொடஙகுவாாகள பெணகளை வைததுககொணடே தான் விவகாரமெல்லாம் நடககும். குடும்பக கஷ்டங் களும் குடித்தனப் பாாததைத தாஙகும் விதமும்

மாமியார் நாத்தனார்களின் கீழ் இருக்க வேண்டிய மாதிரியும் உபதேசம் ஆகும். குழந்தைப் பருவத்திலேயே பார்ப்பு புத்தி வந்துவிடும். பன்னிரண்டு வயசுக்குள் கட்டிக் கொடுக்காவிட்டால் வெட்கம். பெண்ணை வெளியே பார்ப்பது கடினம். ஆகிருதி வளர்ந்தால் தாய் தந்தையருக்குப் பயம். 'என்னடீ, குதிரைபோல் வளர்ந்து வெச்சுக்கொண் டிருக்கையே!' என்று தாட்சிணயம் இல்லாமல் கேட்பாள் மாடியகத்துச் சுப்புக் கிழவி. அன்று முதல் சாப்பாடுகூடக் கொஞ்சம் குறையவே போடுவர்.

மாசம் மாசம் வரும் தீண்டலில், நோவும் குணவேற்றுமையும் தாங்க முடியாமல் இருக்கும். வெளியில் சொல்ல மாட்டார்கள். அழுகையையும் அடக்குவார்கள். வைத்தியமும் வெகு மோசம். உடல் வலி, மனத்துயரம் என்பவைகளைப் பொறுப்பதில் ஸ்திரீகளுக்கு நம்மைப் போல நூறு மடங்கு சக்தி இருக்கும் இது போதாதா? பேய், பிசாசு என்று அசாத்தியப் பயத்தை உண்டு பண்ணி, கோவில் குளங்களுக்கு இழுத்து, மந்திரவாதியைக் கொண்டு கோரமாய்த் தலையை அவிழ்த்து ஆடச் செய்து, பிரம்பால் அலற அலற அடித்து, 'இந்த உயிர் எதற்கு? சாவது நலம்' என்று எண்ணும்படி படுத்துவார்கள் ஒரு பெண்ணை மந்திரவாதி அடித்துப் பயமுறுத்திப் பயங்கரமான சத்தங்கள் போட்டுப் பார்த்தான். அவள் ஆடவில்லை மூன்று நாள் பிரயாசைப் பட்டும் ஒன்றையும் காணவில்லை. 'தலையை அவிழ்த்துத் தானே கொஞ்சம் ஆடினால் அல்லவா, பிடித்த பேய் வரும்?' என்று அதட்டினான். 'நானாக ஆடி வரவழைக்கிற பேய் பேயல்ல' என்று பெண் தைரியமாய் எழுந்திருந்து உள்ளே போய்விட்டாள்.

## புக்கக வாழ்க்கை

மற்றொரு விந்தை உண்டு. ஆனால் பழகிப் போனதால் நமக்கு விந்தையாகத் தோன்றாது. பெண்

கள் பிறந்த அகததில இருப்பது வேறு; புகுந்த அகததில இருபபது வேறு. 'இந்தப பெணதானு அவள!' எனறு கேடகலாம். இஷடபபடி ஓடி ஆடிக கொணடு, வேடிககை விளையாடடில சோந்து, 'களுக்' எனறு சிரிதது, சாதாரணமாயப பேசிககொண டிருப்பாள ஓா இடததில. மறறோா இடததில தலை நிமிரக கூடாது சீராக நடககவேணடும் ஒருவா கேடகச சிரிககக கூடாது. தூண மறைவில, கதவு மறைவில், நிற்கவேணடும். வாசலில போகக கூடாது. 'சூ, சூ' எனறு மடடும் சததம் செயயலாம. அது அாததமாகாவிடில, அருகில இருககும் குழநதையிடம் மெதுவாயச சொலலலாம். முறுககு, சீடை தின்றால ஓசைபபடாமல வாயில நனறாக ஊறின பிறகுதான் தினபது ஒழுஙகு. வீடடில எலலோரும படுதத பிறகுதான் புருஷன் தூஙகுமிடம் போகலாம். அதற் கும் மாமியாாககாரி உததரவு வேணடும். தானே போயவிடடால, 'என்ன ராஙகிடி; நம்மைத தாண டிணடு, டாக, டாக என்று போறதைப பாததியா?' எனபாள. துஷட எஜமானியாய இருந்தால, 'கடடேல வைகக' என்றாவது, 'பாம்பு பிடுஙக' எனறாவது ஒரு சாபம் பின் தொடரும். புருஷன வெளியூா போய ஆறு மாசம் கழிததுத திரும்பி வந்தாலும, மறறவரைப போல நெருஙகி க்ஷேமம விசாரிததுப பேசலாமா? ஒரு நாழிகை இரணடு நாழிகை பொறுதது ஏதோ தறசெயலாயக கணடவள போலச சந்திகக வேணடும். பிறநத அகதது மனிதா வநதால அவருடன அதிக மாயப பேசககூடாது. 'இன்னும் ஒரு நாள இருங களேன்' என்று தன வீடாகப பாவிதது உபசாரம் பணணலாகாது.

நான் ஒரு தடவை என் தமககையைப் புகககததில பாாககப போனேன். எதிா வீடடுக்காரரை நலல வாாததை சொலலி, அவாகள் ஏதோ காரியததுககுக கூப்பிடடதுபோல கூப்பிடச சொலலி நாலு வாா்த்தை

பேசிவிட்டு வந்தேன். மற்றொரு சமயம் ஒன்று விட்ட தமையனார் பெண்ணை அவள் புக்ககத்தில் காணப் போனேன். காலையில் எட்டு மணி இருக்கும். அவள் மைத்துனன் என்னைத் திண்ணையில் உட்கார வைத்து, 'காலைவேளையில் வேலை அதிகமாய் இருக்கும்போது வந்தீர்களே. ஐந்து நிமிஷம் பேசித் திரும்புங்கள்' என்றான் பெண்ணிடம் இந்த ஆக்ஞையைச் சொன்னதும், 'ஐந்து நிமிஷந்தான் எதற்கு? பார்த்தாகி விட்டது. போய் வாருங்கள்' என்று விடை கொடுத்து விட்டாள். அந்த மைத்துனன் ஹைகோர்ட்டு வக்கீல். நான் அப்பொழுது ஹிந்து ஹைஸ்கூல் ஹெட்மாஸ்டர். பெண்ணுடைய அகமுடையான் ஒரு வாயில்லாப் பூச்சி.

எல்லா மாமியாருமே பொல்லாதவர்களா? நாட்டுப்பெண்ணை நன்றாய் வைத்துக்கொள்கிறவர்களும் உண்டு. ஆபீஸ்களில் எப்படிச் சில எஜமானரிடம் சேவிப்பது சந்தோஷமாயும் வேறு சிலரிடம் சேவிப்பது சங்கடமாயும் இருக்குமோ அப்படித்தான். பிறர் மனம் நோவாமல் நடந்துகொள்ளவேண்டும் என்கிற புத்தி படிப்பால் வருகிறதன்று; பணத்தால் வருகிறதன்று; குலத்தால் வருகிறதன்று: பிறப்புடன் வருகிறது. 'இயற்கைப் பெரிய மனிதர்' (Nature's Gentlemen) என்று ஆங்கிலத்தில் சொல்வார்களே, அப்படியே இயற்கைப் பெரிய மனுஷிகளும் இருக்கிறார்கள். நாட்டுப் பெண்ணின் அதிருஷ்டம் என்று கூற வேண்டும்.

சீக்கிரத்தில் பிள்ளையைப் பெற்றால் புண்ணியசாலி எனலாம். மலடிக்கும் பெண்களைப் பெறும் ஸ்திரீகளுக்கும் இந்த உலகத்திலேயே நரகந்தான். நேரில் வாய் கூசாமல், வருகிறவர் போகிறவர் எல்லாரும் அசட்டையாய்ப் பேசுவார்கள். மூத்தாள் போய் இளையாளாய் வாழ்க்கைப்படும் ஸ்திரீகளுக்கு வேறு எந்தத் துன்பமு

கள் இருந்தாலும், மாமியார நாத்தனா படுததல் அதிக நாள் இராது. புருஷனுக்குக கொஞ்சம் கண திறந் திருககும். மோகமாக இருப்பான். தானே கவனிப் பான. இதுதான் ரகசியம். அகமுடையான் பிரீதியாக இருந்தால வேறு ஒருவரும் கொடுமை காட்டமாட டாரகள. முககால வாசிப பிளளைகளுககு இது தெரிகிற திலலை. தெரிநதாலும அதை வெளியிடுவதற்கு மனத திடம சீககிரததில் வராது தகுநத காரணம இலலாமல நாட்டுப பெணணைத தளளிவைததுப் பிளளைகளுககு மறு கலயாணம் செயது வைககிற தாயார முன்னாளில அதிகம். ஆனால வெகுவாய இளையாளாய வரும் பெணகள, மாமியாரைச சீககிரததில அடக்கி மூலையில உடகாரததுவாரகள. ஆண்டவன செயலில ஒருததி கஷடம், மற்றொருததிக்குச சுகமாய முடியும்.

உளளே நடக்கும் சம்பவங்களை வெளியே சொலல யாரும் தயஙகுவர். பிறர உதவி கிடையாது. அடிததுக கததினாலும கூட அககம் பககததார ஏனனறு கேடபது மரியாதை யலல 'தாலி கட்டினவன் எலலா உரிமையும் உளளவன். நாம் குறுககிடப பாததியம் இலலை' எனறு பாரததுககொணடே இருந்துவிடு வாரகள நான சிறு வயசில கணணால பாரதத அககிரம மும கொடுமையும் கணககிலலை எழுதினால புஸதக மாகும். எஙகளூரில பெரிய குடும்பததில, ஒனபது மாசம் காபபம் சுமநத பெணணை மாமியார தூணடுத லால, புருஷன் வெயிலில வெகு நேரம் நிறுததி அடிததுக கீழே தளளி, வயிற்றில காலால உதைததுக கொன்று, வழககு, கோரடடுககுப போகாமல போலீஸாரை வசபபடுததி அமுககியதை அறிவேன. ஒரு பததிரிகையில கதையாக இதை வரைந்திருக் கிறேன்.

கற்பு விஷயததில், ஆடவர்களை விடப் பெணடிர் ஐம்பது மடஙகு மேலானவரென்று சந்தேகம் இல்லா

மல் சொல்லலாம். இது நம் ஜாதிக்குப் பெருமை தான். வலங்கைமானில வெளிப்படையாகக் கெட்ட ஸ்திரீகள், எனக்குப் பதினைந்து வயசு நடக்கும்போது இரண்டே போதாம். தெரிந்ததும் தெரியாததுமாய இன்னும் இரண்டு மூன்று பேர் இருக்கலாம். அவர்களுக்கு இவ்வளவு உயர்வு வருவதற்குக் காரணம், பெரும்பாலும் நாம் ஏற்படுத்தி இருக்கும் நிர்ப்பந்தமும் கட்டுப்பாடுமே. இவைகள் வரவரத் தளர்ந்து வருகின்றன. நவ நாகரிகம் வேண்டுமென்று ஸ்திரீ ஜாதிக்கு முன்னேற்றம் தேடுவோர், அவர்களுடைய நடத்தையைப்பற்றி ஏதாகிலும் காதில் பட்டால், இது தீராதென்று மனத்தை ஒருவாறு சமாதானப் படுத்திக் கொள்வது அவசியம். கெடுதல் கலவாத நன்மை பிரமனுடைய கற்பனையில் இல்லை.

## பெண்டிர் சம்பாஷணை

பழக்கம், நோக்கம், தொழில், கோஷ்டி எல்லாம் வேறாக இருக்கும்போது, பெண்டிர்களின் சம்பாஷணை வேறு படாதா? பெண்டிர் மட்டும் கூடிப் பேசுவதை நாம் கேட்க அவகாசம் வெகு குறைவு. நம்மைப் பொருட்டாக நினைக்கும் வயசு வருமுன் நோக்கு அநுபவந்தான் முக்கிய ஆதாரம். மற்றதெல்லாம் கேள்வி மூலமும் ஊகம் மூலமுமே அறிந்தவை. வீண் வம்பு பேசுவதில் நமக்குச் சற்றேனும் அவர்கள் பின் வாங்கார். ஒருவரை ஒருவர் பூஷிப்பதிலும் தூஷிப்பதிலும் பரீக்ஷை வைத்தால் அநேக ஸ்திரீகள் டாக்டர் பதவிக்குத் தகுதியுள்ளவர்கள். நாவில் நரம்பே இல்லாமல் திட்டுவதில், திருவிடைமருதூர்ப் பெண்களுக்கு நிகரில்லை என்பது பிரசித்தம்.

நான் ஒரு சமயம் நேரில் இதை அநுபவித்தேன். திருவிடைமருதூர்ச் சீமாட்டியை மணம் புரிந்த சிநேகிதர் ஒருவர் வீட்டுக்குப் போஜனத்திற்குச்

சென்றேன். முன்பே அறிவித்திருந்தாலும் சன்மையல் பிரயத்தனத்தைக் காணவில்லை. என்னவென்று கேட்கப் போன கிருகஸ்தா திரும்பி வந்து என்னுடன் உட்கார்ந் தார் அவருக்கு முகத்தில் ஈ ஆடவில்லை சமாசாரம் என்னவென்று விசாரிக்க எனக்கு மனம் துணியவில்லை. இந் நிலையில் அந்த அம்மாள் குரல் செவியில் எட்டத் தொடங்கியது சின்னத் தூறலில் ஆரம்பித்துப் பெரு மழை சொரிவது போல, சில மொழிகளை மெது வாகச் சொல்லிச் சூடேறியதும் சத்தம் ஓங்கி, அதிக வேகமாகத் தன் குறைகளை முறையிட்டாள். வாழ்க் கைப் பட்டுப் புருஷன் அகத்துக்கு வந்தது முதல் தான் பட்ட சிறுமைகளையும் அவமானங்களையும் வரிசையாய் அடுக்கவே, முதலில் திக்கப்பட்ட என் நண்பர் புன் சிரிப்புச் சிரிக்கத் தலைப்பட்டார். சில நிமிஷங்களுக்குள் சரித்திரம் சமத்காரத்தையும் உயர்ந்த நடையையும் பெற்றது. கிருகஸ்தர் கைகொட்டிச் சிரிக்க, அவருக் குச் சித்தம் புரண்டதென்று சந்தேகித்தேன் அவர், தாம் இவ்வளவு காலம் கேட்டதில்லையென்றும், எனக்காக என்று வெகு காலம் அடக்கிவைத்திருந்து வரிசையெல்லாம் காட்டுகிறதாகவும் சொன்னார் எனக்கும், புஸ்தக வாசனையே தெரியாத ஒரு குக்கிராமத்துப் பெண் தட்டுத் தடங்கல் இல்லாமல், சொன்னதைத் திருப்பிச் சொல்லாமல் தாரையாக மொழிவதைக் கேட்க, உட் புகுந்த ஏதோ ஒரு பூதம் அவள் வாய்மூலம் தன் வித்தையைக் காட்டுகிறதோ என்று தோற்றியது. வீட்டில் உள்ள மற்றப் புருஷர்களை, 'மாசக் கடன்காரன், வாரக் கடன்காரன், நித்தியக் கடன்காரன்' என்று வகை வகையாய்ப் பிரித்துக்கொண் டிருந்தாள். நான் கேட்டிராதவையும் படித்திராதவையுமான உபமானங் களும் பழமொழிகளும் சந்தாப்பத்துக்குப் பொருத்த மாய், ஒன்றன்பின் ஒன்றாய் வெளிவந்தது, மிக்க வியப்பாக இருந்தது. சுமார் முக்கால் மணி இந்த

நாடகம் நடைபெற்றது. ஓய்ந்ததும் எங்கள் இருவருக்கும் பசி தாகம் இல்லை; கோப தாபம் இல்லை; அந்த அம்மாளிடம் ஒரு நாளும் இல்லாத நன்மதிப்பு எனக்கு உண்டாயிற்று. ஏதோ முற்பிறப்பின் வாசனை; வெளியாவதற்கு அநுகூலமான கால தேச வர்த்தமானங்கள் ஏற்பட்டவுடன், அவளும் அறியாது, மலர்ந்து கோலம் செய்தது என்று எண்ணினேன்.

புதுச் செய்தி கேட்டால், அதற்குக் கொஞ்சம் 'மூக்கு முழி' வைத்து, ஊரெல்லாம் விளம்பரம் செய்பவர் சிலர் உண்டென்று எல்லோருக்கும் சொந்த அநுபவத்தால் தெரியும். இந்தக் கியாதியைப் பெற்ற கிழவி ஒருத்தி வலங்கைமானில் இருந்தாள். இவளுக்குப் போட்டி ஒரு சுமங்கலி; வீடுகளில் காரியம் செய்து பிழைப்பவள். பெரியகத்துப் பாட்டியும் காரியக்காரி காமுவும் ஊரை இரண்டாகப் பிரித்துக் கொண்டு அநேகமாய்ச் சந்திப்பதில்லை. ஒரு சமயம் இவ்விரண்டு வம்பரும் ஒரு வளைகாப்புக் கூட்டத்தில் ஏக காலத்தில் வந்து சேர்ந்தார்கள். காரியக்காரி நழுவப் பார்த்தாள்.

"இந்தாடி காமு, போகாதே. இன்னிக்கு என் கதைதான் ஒசத்தி. நீயும் இருந்து கேளு" என்று மூட்டையை அவிழ்த்தாள் கிழவி: "எங்க அடுத்தாத்துக் கல்யாணம்? வேணுமின்னுக் கேளு வேண்டாட்டா விச்சாயிரு. மூணு நாள் ரொம்ப அழகா, சண்டை பூசல் இல்லாதே நடந்தது. வேணுமின்னுக் கேளு வேண்டாட்டா விச்சாயிரு. திருஷ்டிப் படப் போறதே இன்னு சொல்லிண்டிருந்தோம். இன்னிக்குச் சாயங்காலம் பச்செ பூசினதும் சம்பந்திகள் ஒத்திக்கொத்தி ஏசிக்கிண்டா. வேணதெல்லாம் ரெண்டு கட்சிக்காரியும் பாடினா. வேணுமின்னுக் கேளு வேண்டாட்டா விச்சாயிரு. பிள்ளையாத்துக்காரி ஒருத்தி தேம்பி அழ ஆரம்பிச்சுட்டா. என்ன என்னன்னு கேட்டா, சொன்

ளுத்தானே! தேமேன்னு நம்ம கல்யாணிக்குப் பயம் பிடிச்சுட்டுது. 'அருமையா முத முதல் ஒரு கல்யாணம் பண்றேன். சரியா நடக்கணுமேன்னு எத்தனையோ ஆண்டவனை வேண்டிக்கொண் டிருக்கேனே! எந்தப் பாவியோ கண்ணை வெச்சுட்டாளே!' என்னு ஏங்கிப் போயிட்டா. வேணுமின்னுக் கேளு வேண்டாட்டா விச்சாயிரு. அந்தம்மா அழுகை நிக்கல்லே. கேட்டால் சொன்னுத்தானே? சம்பந்தியம்மாவுக்குத் தம்பி ஆமண்டையாளாம். அவளும் எத்தனையோ பாடினு. வேணுமின்னுக் கேளு வேண்டாட்டா விச்சா யிரு. கல்யாணப் பெண்ணை யாரோ, 'நீயும் பாடேண்டி, நோக்குத் தெரியுமே' என்னு கிளப்பி விட்டுட்டா. வேணுமின்னுக் கேளு வேண்டாட்டா விச்சாயிரு. அது தேமேன்னு சாது, பாடலாமாக்குமின்னு, 'தாவாரத் திலே தட்டாஞேடு போனுளே தையூ' இன்னு பாடினு. அந்தம்மாக்குத் தையூன்னு பேராம். தட்டான் எழவும் கொஞ்சம் உண்டாம். வேணுமின்னுக் கேளு வேண்டாட்டா விச்சா யிரு. கொழுந்தெ கண்டுதோடி? அதும்பாட்டுக்குச் சொல்லிப்பிட்டுது. 'தெரிஞ்சு வேணுமின்னுதான் பாடித்து. நானேன் வந்தேன்? சிவனேன்னு அடைச்சுக்கிண்டு கிடக்கப்படாதோ?' வேணுமின்னுக் கேளு வேண்டாட்டா விச்சா யிரு, இப்படியெல்லாம் கூச்சல் போடவே புருஷா காதிலே யும் பட்டுட்டுதாம். நாளைக்கு ஆசீர்வாதத்துக்குள்ளே, காலிலே விழுந்து கன்னத்திலே போட்டுண்டால் ஒழிய நடக்கப் போறதில்லையாம்; போயேன்! வேணுமின்னுக் கேளு வேண்டாட்டா விச்சா யிரு."

"காலிலே விழுந்து கன்னத்திலே போட்டுண்டா என்ன? அப்படி வணங்கித்தான் போகணும் பொண் ணைப் பெத்தவள்" என்ருள் காரியக்காரி காமு.

"நான் அப்படித்தான் சொன்னேன். வேணு மின்னுக் கேளு வேண்டாட்டா விச்சா யிரு. அத்தோடு

போயிடும் அது. புருஷா வரைக்கும் போயிட்டு தோன்றோ? அந்தப் படுபாவி இருக்காறோன்றோ: ஓத்தன், நம்மூர்ப் பேரைக் கெடுக்கிறத்துக்கு: வெண்டைக்காக் குப்பன்! வேணுமின்னுக் கேளு வேண்டாட்டா விச்சா யிரு. இதுதான் சமயம்; வெசை வெச்சு அம்பது ரூபாய் பிடுங்கிடணுங்கிறுனும். இந்தப் பொண்ணைப் பெத்தவன், 'நானெங்கே போவேன், அம்பது ரூபாய்க்கி?' என்கிறுனும். ஓரே கொழப்பமாய்க் கிடக்கு. வேணுமின்னுக் கேளு வேண்டாட்டா விச்சா யிரு. நான் வந்துட்டேன். ஓங்களண்டே சொன்னுலொழிய நேக்குத் தீரல்லே."

காரியக்காரி காமு இந்த இடத்தில் தன் பிரசங்கத்தைத் துவக்குகிருள்:

"அதுக்கு மேலே கொழப்பமாகக் கிடக்கு, வடக்குத் தெரு சீதையம்மா ஆத்திலே. நமக்கேன் பெரிய மனுஷாளாத்து வம்புன்னு பேசாமே இருந்தேன். கிழவி கதையைக் கேட்டதும் தாங்கல்லே. சொல்றேன்: தோப்பனுக்கும் பிள்ளைக்கும் சண்டை கைகலந்து போய்க் குடுமியைப் பிடிச்சுண்டுட்டா. வம்புக்காரீம்பாளே என்னெப் பிடிச்சு. நானுச் சொல்லலே பாருங்கோ. சீதையம்மா பொண்ணைப் புக்காங் கொண்டுவிடப் போறு. மாமனார்க்காரர் உள்ளே வரப்படாதுன்னுட்டாராம். எப்படியானும் நொழஞ்சுடறதின்னு பொண்ணை இழுத்துண்டு சீதையம்மா போறு. அந்தப் பிராம்மணன் கையை விரிச்சுண்டு, தெரியும் சேதீன்னு மறிச்சுட்டார். மாமியாரும் ஆம்படையானும் பாத்துண்டுதான் இருக்கா. இதெல்லாம், நான் ஏழை சொல்லப்படாது. மனசு கேக்கல்லே. சாந்திக் கல்யாணத்தே பிடிச்சு ஏதோ அட்டிகை விஷயமாத் தகருர் இருக்காப் போல் இருக்கு. நூறு ரூபாய் குடுக்கணும் இங்கிறுர் சம்பந்தி. குடுக்கிறதில்லேங்கிறுர் சீதையம்மா ஆத்துக்

காரா அதுககாகததான், ‘பொண வேணடியதில்லே, நீஙகளே வெசசுக்கோஙகோ’ இஙகிறா தாயாரும் பெணணும் திருமபி வந்துடடா வந்தது முதல ரோதனே தான. இருககுமோனனே? பெதத வயறு எரியாதா? ‘இவளுககேன கொழுபபு? இவளே யாா சொலலச சொலறா’னனு சொலலாதேயுஙகோ. பொணணுககு ஓடடபபறநதான, தலேயெ அடகு வெசசாவது குடுததுடுவம், மானம் போறதேஙகிறுன். தோபபனா படாதுஙகறா இபபடி உணடோ ராஜயததிலே! நான நாலெடடததிலே சமையலுளளே யெலலாம் போயப பொழைககிறவள. எம் பேரிலே குததஞ் சொலலாதேஙகோ. இததனே வயசிலே நான் இந்த மாதிரிப பாாததிலலே. ‘வாழாதேதான இருககடடுமே; அவாததிலே இலலேயா, இவாததிலே இலலேயா’ இன்னு ஒரு தோபபன கேககறது? சீதையம்மா நாககெப் பிடுஙகிணடு சாறேஙகிறு. பொணணுககா, அழுது அழுது மூஞசி அப்பமா இருககு. கணராவியாயிருககு. அவாதது வாசலோடு போற போதெல்லாம உளளே போய ஒரு வாாததை ஆறுதலாச சொலலிவிடடுததான போவேன். தளளி வெசசுடடு வேறே கலயாணம் பணணிவிடடால, எனன செயவேனெனனு, மாஞ்சு சாகிறு, பாவம்! பகவான நீலேஙகிறுளே, இபபடிததான நீலே (லீலே) பணணணுமோ! அவரை யாா கேககறது? தலேயிலெழுதது! அவாவா, போன ஜன்மததிலே பணணின பாவம் விடுமா? இதோ பாருஙகோ, எனனெ விடடுதா? போாக காரியம் குமிஞ்சு கிடககு. நான்தானே சேசாகணும்? போயிடடு வரேன்.”

# சிரத்தைக்கு என்ன வேண்டும்?

தொன்றுதொட்டு வரும் மதத்தினகண நமக்கு இருககும் நம்பிக்கைககு என்ன காரணம? தாய நாடா? அறிவை ஊட்டும் நூற்பயிற்சியா? முறைப்படி வழங்கும் சடங்கா? சுற்றி நடைபெறும் விழாககளா? ஸ்தல யாததிரையா? பட்டினி, விழிபபு, பூசை முதலிய அநுஷ்டானமா? இவையொனறும் இன்றி மனிதருக குத தெயவ பகதி இருததல கூடும் உணமையில அது வேறொன்றைப பொறுதது நிறபதிலலை. இநத ஆழ்ந்த தததுவததை அவரவா தததம் அநுபவததால உணாந திருப்பா. எனககுத தெரிந்தவைகளுள அயலநாட்டு அநுபவஙகள மூன்றைக் கூறுகிறேன.

## 1

1922-ஆம் வருஷததில நியூஸீலணட என்னும் 'டொமினியனி'ல குடியேறிய இந்தியருககு மற்ற இனத தாரைப் போலவே உரிமைகள கிடைககவேணடு மென்று வழககாடப் போனேன. அவவிடதது ராஜ தானியான வெலிஙடன நகரில என்னைக காண ஓா இந்தியா வந்தார. நலல உடை அணிந்திருநததாலும், நிலை, நடை, பேசசுத தோற்றஙகளாலும் பெரிய மனித ரெனறு அவரைக கருதினேன. வழககமான கேள்வி கேட்டு விடைபெற்ற பிறகு, வந்த காரியததை விசா ரிககலானேன். அவா, துறைமுகததில பளுவான சாமான்களை ஏற்றி இறககிப் பிழைபபவா; நாளொன் றுககுச சுமாா பதது ரூபாய கூலி பெறுவாா; குடியி லாவது அது போனற வேறு வழியிலாவது பணச செலவு செயயாமல பாஙகியில் தகக தொகை உளளவா. இந்தியாவுககுத திரும்ப வேணடும் என்கிற ஆவல் அவருககு வலுததது.

ஐக்கிய மாகாணத்தில் கங்கையின் வட கரையில் உள்ள ஓர் ஊரில் அவர் பிறந்தார்; ஊர்ப் பெயர் சரியாக நினைவில்லை. பிராம்மண ஜாதியாம். அவர் மூன்றாம் பிராயத்திலேயே வெளியேறினவர். கொடிய பஞ்ச காலத்தில் எவனோ கங்காணி, கூலியாட்களைச் சேர்ப்பதற்கு வந்து ஆசை காட்டி முன் பணம் கொடுத்து அவர் தாய் தந்தையரை அழைத்துக் கப்பலேற்றிவிட்டான். ஆஸ்திரேலியாவில் ஸிட்னி நகரில் துறைமுகத்தில் வேலை செய்து பிழைத்திருந்தார்கள். நாலைந்து வருஷங்களில் முதலில் தாயும், பிறகு தந்தையும் இறந்தார்கள். அவர்பால் இரங்கிக் குழந்தை இல்லாதவர் ஒருவர் காப்பாற்றி வந்தார். சில வருஷங்களான பிறகு அவர் தாமாகவே பிழைக்கத் தெரிந்து வெலிங்டன் கப்பலில் ஏற்றுமதி இறக்குமதியில் நல்ல வேலைக்காரரென்று பெயர் வாங்கி வந்தார்.

நான் எவ்விதம் உதவ வேண்டுமென்று கேட்க, அவரால் சரியாய் உத்தரம் சொல்லக் கூடவில்லை. ஊர் தெரியாது; உற்றார் தெரியாது; மீண்டும் ஜாதியில் புகுதல் வேண்டும்; பிராம்மணப் பெண்ணை மணந்து குடும்பத்தை விருத்தி செய்ய வேண்டும். திரவியத்தால் தடை இல்லை. 'கோத்திரம் தெரியுமா?' என்று கேட்டேன். அவருக்குக் கோத்திரம் என்றால் இன்னதென்பதே புரியவில்லை.

"பூணூல் உண்டா?" என்றேன்.

"தகப்பனார் மார்பில் அணிந்திருப்பதைக் கண்டது உண்டு. அது வேண்டுமானால் உங்களால் கொடுக்க முடியாதா? எவ்வளவோ காலம் மேற்பிறப்பினரான இந்தியரைப் பார்ப்போமா என்று ஆவலுடன் காத்திருந்து சாஸ்திரி என்று பெயர்கொண்ட ஒருவர் வந்தபொழுது கரையேற்றம் பெறாவிடில் எப்பொழுது தான் பெறுவேன்!"

இவவாறு அவர் மனமுருகப் பேசக் கேட்ட நான் திடுககிடடேன். "எனனல ஒன்றும் இயலாது. உம்முடைய விருப்பம் நிறைவேருது" என்றேன்.

வீணுக அவா ஆசையைப் பெருக்கக கூடாதென பது என எணணம். என மொழியின் உறுதியைக் கேடடவுடன் அவா இருதயம் உடைந்ததுபோலும்! கலகலவென்று கணணீா சொரிய, "ஆனல நான் இங்கேயே வயிறு வளாத்துப் பவுனை சேமிதது ஆத்மாவை அழித்துவிடடுச் சாக வேணடியதுதானு?" என்று கைககுடடையால முகத்தை மூடித துககிததாா.

'மாததினின்று சிதறிக காற்றில ஓடிபபோன சருகுககுப பசுமை மீளுமோ?' இந்தக கருதது என் மனத்தில தோன்றியது. நான அதை அவரிடம் சொலல விலலை. கூடினவரையில் ஆறுதல சொன்னேன். "நலலது பொலலாதது, புணணியம் பாபம் என்கிற பகுததறிவு உணடாவதற்குமுன் நிகழ்ந்த கேட்டுககு நாம் ஜவாப்தாரிகளலல. கருணமூாததியான கடவுள நம்மை அதறகாகத தணடிகக மாடடாா" என்றேன். இது அவா புத்தியில ஏறவிலலை. "ஆரிய ஸமாஜிகள் இங்கே இருககிருாகளா?" என்று கேடடேன.

"இருககிருாகள். அவாகள செய்யும் சுததியால் பிராம்மண அநதஸ்து வராதே. எனககு மற்றென்றும் தேவையிலலை" என்று முடிவாயச் சொலலிவிடடாா.

மதத்தை ஒடடின சமாசாரம் ஒன்றும் தெரியாத அவருககுத தீராக் கவலையை விளைவிக்கத் தகுந்த சிரததை எங்கிருந்து வந்தது?

## 2

ஐந்து வருஷத்திற்கு அப்பால் நான் தென்னுப் பிரிக்காவில் இருந்தபொழுது, ப்ரிடோரியா என்னும்

பட்டணத்தில் படேல் என்ற பெயர் கொண்ட ஒரு குஜராத்திப் பிராம்மணர் இருந்தார். வேறு பிராம்மணர் அந்த ஊரில் இல்லை. ஒரு நாள் சாயங்காலத்தில் என்னை அவர் தம் வீட்டுக்கு அழைத்துப் போனார். அங்கே தம் மகன் பதினெட்டு வயசுள்ள சிறுவனை அழைத்து நமஸ்காரம் செய்யச் சொன்னார். அவன் ஸாஷ்டாங்கமாயப் பிரணமம் பண்ணி என் பாதத்தைக் கைகளால் தொட்டுக் கண்களில் ஒற்றிக்கொண்டான். கோத்திரம், பிரவரம், நாமம் ஒன்றும் தெரிவிக்கவில்லை. நான் அவைகளைக் கேட்டுத் தெரிந்துகொண்டேன். அன்றுதான் அவனுக்கு உபநயனம் பண்ணினாராம்.

"உபாத்தியாயர் யார்?"

"நான்தான்."

"நீங்கள் என்ன மந்திரம் சொன்னீர்கள்? என்ன சடங்கு செய்தீர்கள்?"

"எனக்குக் காயத்திரி தவிர வேறு ஒன்றும் தெரியாது. அந்த மட்டும் சொல்லி வைத்தேன்."

"எங்கே, என்னிடம் சொல்லுங்கள்."

ஏதோ எழுத்துப் பிழைகளுடன் சொன்னார். சில அசௌகரியங்களால் கூர்ஜரத்துக்குப் போக முடியாமற் போனதாகவும், இன்னும் இரண்டு வருஷங்களுக்குப் போக முடியாதென்றும், யக்ஞோபவீதத்தை ஊரிலிருந்து வருவித்ததாகவும் கூறினார். அது எனக்கு வெகு விநோதமாக இருந்தது.

"உங்களகத்தில் இருந்தால் எப்படி நடந்திருக்கும்?" என்று கேட்டேன்.

"பந்துக்களை அழைத்து அக்கினியில் ஹோமங்கள் செய்து, வாத்திய முழக்கத்துடன் விரிவாய்ச் செய்திருப்போம்" என்றார்.

“ஹோமமில்லை, மந்திரமில்லை, தந்திரமில்லை, முழக்கமில்லை, தக்ஷிணை இல்லை, விருந்து இல்லை; இந்த உபநயனம் உபநயனமாகுமா?”

“ஏதோ ஆகுமென்ற நம்பிக்கைதான்.”

“நம்பிக்கைக்கு ஆதாரம் வேண்டியதில்லை போலும்!”

“அயலூரில், அயல நாகரிகம் அயல மதம் இவைகளிடையில் சிக்கிய எங்களுக்கு ஒரு போக்கு வேண்டுமே!”

இது கேட்டு, “ஆமாம்” என்று மெதுவாய்ச் சொல்லி யோசிக்கலானேன். அநாதியாய் வழங்கி வரும் நடைகளின் மர்மத்தை இப்பொழுது அறிவது இயலாதது. வெளி ஆரவாரத்துடன் உள்ளத்து உணர்ச்சியும் ஒன்றோடொன்று இணைந்து வலிமைகொண் டிருக்கின்றன. சொந்த நாட்டு இயற்கையில் இவை கூடியே இருத்தலால், ‘இது காரணம், இது காரியம்; இது ஆதாரம், இது ஆதேயம்’ என்று பிரித்து ஆராய முடியவில்லை வேற்று நாட்டிலோ வெளி ஆடம்பரங்களுக்கு இடம் கிடையாது. உள்ளத்தில் ஆழ்ந்து கிடக்கும் சிரத்தையும் பக்தியும் குன்றாது எழும். ஹோமமும் மந்திரமும் இருந்தால் சிரத்தை உண்டு என்பது நிச்சயமல்ல. அவை இல்லாமலும் சிரத்தை விளங்கும்.

## 3

மலேயாவில் ரப்பர் தோட்டம் முதலிய இடங்களில் கூலி வேலை செய்து பிழைத்து வரும் இந்தியரின் நிலையைப் பற்றி விசாரிப்பதற்கு ஐந்து வருஷத்துக்கு முன் சர்க்காரால் அனுப்பப் பெற்றுச் சென்றேன். இவர்களில் சிலர் தோட்டத்தார் கொடுத்த நிலத்தில் தாங்களே வீடு கட்டிக்கொண்டு பயிர் போட்டுப்

பலனைச் சொந்தமாக உபயோகித்து, குடியேறியவர்களாயக் கிராமம் கிராமமாகக் கூடி வாழ்கிறார்கள். பரீக்ஷார்த்தமாகத் துவக்கிய இந்த ஏற்பாடு நிலைபெற்று நம் ஜனங்களுக்குப் புது ஸ்தலத்தில் குடியேறி ஸமஷ்டியாய் வாழத் திறன் உண்டு என்று காட்டி வருகிறது.

இந்த இடத்தைப் பார்ப்பதற்கென்று ஒரு நாள் காலையில் அழைத்துப் போனார்கள். புறப்படும்பொழுது நிகழ்ச்சி முறையில் சுப்பிரமணியர் கோயிலில் வேல் ஊன்றுதல் என்று கண்டிருந்தது. எனக்கு அது புரியாததால் என்னவென்று விசாரித்தேன். அவர்கள் தெரியப்படுத்தவே, "எனக்கு ஆகம நூல் தெரியாது அதில் நியமித்திருக்கும் முறை தெரியாது. நான் பெயருக்கு மட்டுமே சாஸ்திரி" என்று சொல்லித் தப்பப் பார்த்தேன்.

"ஆயிரக்கணக்கான மனிதர்கள் - ஆண், பெண், குழந்தைகள் அனைவரும் கூடிக் காத்துக்கொண்டிருக்கிறார்களே. நீங்கள் எப்படி மறுப்பது? நாங்கள் எப்படி நிறுத்துவது?"

இதைக் கேட்டதும் என் வயிற்றில் நெருப்பைக் கட்டியதுபோல் ஆயிற்று ஆங்கில ஆடை ஒரே ஈரமாயிற்று அன்று நல்ல வெப்பம். காற்று லேசமேனும் இல்லை

கீற்றுப் பந்தலொன்று பெரிதாக அமைந்திருந்தது. பந்தலுக்குள்ளும் வெளியும் ஜனங்கள் நிறைந்தைக் கணக்கிட்டு முடியாது அதைக் கண்டதுமே எனக்குக் கிலி பிடித்தது பந்தல் கோடியில் ஒரு செங்கல் மேடையில் ஒரு சிறு ஓவியத்தை முருகனென்று காட்டினார். சந்தனம், குங்குமம், ஊதுவத்தி, தேங்காய், வெற்றிலை, பாக்கு, கற்கண்டு, சாக்கரை, புஷ்பம், வாழைப் பழம் எல்லாம் கூட்டத்துக்கு ஏற்ற அளவுக்குக் குவித்திருந்தன. மேளம் வாசித்துக்கொண்டிருந்தார்கள். தப்பட்

டையையும் ஒரு பக்கத்தில அடித்தார்கள். மேடை யருகில, உயிரச சேதம் நேரிடுமோ என்று பயப்படும் படி நெருக்கம. விலககுவோரும் இலலை; விலககச சாததியமும் இலலை. நான மாராபு வலி வந்து மூனறு மாததிரை தினறு எப்படியோ பலலைக கடிதது விழாமல நினறேன. எனனுடன வந்த ஜி. எஸ். போஸமன துரை வெளியிலேயே தஙகிவிடடார

இனிச செயவது என்ன? பேயககு வாழககைப் பட்டோம், புளிய மரம் ஏறததான் வேணடும் உளளி ருககும் நடுக்கத்தை வெளிக காடடலாகாது. உரககக் கேடதது, "வேல எஙகே?" என்று கேடடேன பள பளவென்று இருந்த ஆயுததகதையும் ஈரமாககி யிருந்த பூமியையும் காடடினாரகள.

"வேல நாடடுவதற்கு முன நடதத வேணடியது ஏதாவது உணடா? பூசாரி யாராகிலும் இருக்கிறாரா?"

"நீஙகள இருககும்பொழுது பூசாரி வேறு வேணடுமா? நீஙகளே மணையில அமாந்து பூசை செயதுவிடடு வேலை நாடடுஙகள."

எனககு ஆஸனததில அமாந்து யதோகத ஸஙகறபம் செயய இஷடமும் இலலை; செய்யத திறமையும் போதாது. "யாராகிலும் வயசு முதிாந்தவா, இததகைய சடஙகைப பாரததவா உணடானால முன் வந்து சமயததுககு உதவுஙகள" என்று வருநதினேன.

"நீ வா, நீ வா" என்று சிலா சொலலிககொண டாாகளே தவிர, சிறிது நேரம் ஒருவரும் துணிந்து முன்வரவிலலை. இறுதியில சுமாா நாற்பது பிராயம் கொணட ஒருவன கூடடததினின்று வெளிவநதான். அவனைச சிலா தளளி எனமுன் நிறுததினாரகள. அவன, "வேல நாட்டின பிறகுதான பூசை" என்று என்னை ஏவினான்.

அதற்கு இணங்கி நான் வேலைக் கையில் பிடித்ததும் வாத்தியமும் கைதட்டலும் சமுத்திரம்போன்ற சத்தமும் கிளம்பின. மேற்றிசை நோக்கி நின்று சுப்பிரமணியக் கடவுளின் படைக் கலத்தை, குறித்த இடத்தில் பலத்துடன் நட்டேன். மூன்று அல்லது நான்கு அங்குலம் இறங்கியிருக்கும். வேலுக்குப் புஷ்பம் சூட்டினார்.

பிறகு அவன் தன் வேலையை ஆரம்பித்தான். மணையில் இரண்டு நிமிஷம் வீற்றிருந்து கண்களை மூடித் தியானம் செய்து எழுந்தான். தண்ணீர்க் கும்பத்திலிருந்த மாவிலைக் கொத்தைக் கையில் எடுத்து நாலு திக்கிலும் தெளித்துச் சுற்றி இருந்தவர் மேலும் விசிறினான். பிறகு பெரிய தாம்பாளத்தில் சூடத்தைக் கொளுத்திச் சமீபத்தில் இருந்தவருக்குக் காட்டினான். இது வரையில் தந்திரம் மட்டும் இருந்தது. இந்தச் சந்தர்ப்பத்தில் மந்திரம் சொன்னான். உரக்கச் சொல்லியும் எனக்குக் கொஞ்ச நேரம் இன்னதென்று புரியவில்லை. 'சாந்தயே' என்ற பொழுதுதான் ஸம்ஸ்கிருத அக்ஷரமென்று நிச்சயித்தேன். மீண்டும் அதையே சொன்ன பொழுது 'சுக்கம் பார' என்று தெளிவாகக் கேட்டது. 'சுக்லாம்பரதரம்' என்கிற விக்கினேச்வர துதி என்று நிர்ணயித்தேன். இந்தச் சுலோகத்தையே மடித்து மடித்து ஐந்து தரம் மிகுந்த சொற் பிழைகளுடன் காண கடோரமாக உயர்ந்த குரலில் சொன்னான். காண கடோரமென்னும் உணர்ச்சி என் மட்டுந்தான். ஏனையோர் அனைவரும் கரங்களைத் தூக்கியும், அஞ்சலி செய்தும், 'ஹர ஹர!' என்று கன்னத்தில் அடித்துக்கொண்டும் நெஞ்சம் உருகித் தொழுதார்கள். அவர்கள் காட்டிய பக்தியில் எள்ளளவேனும் டம்பமும் இல்லை; சூதும் இல்லை. அந்தச் சமயம் 'சதிர்த்' தேங்காய்கள் அநேகம் உடைபட்டன. அந்தத் துணுக்குகளைச் சர்க்கரை, கற்கண்டு, பழம் முதலியவற்றுடன் பிரசாதமாகச் சில ஜனங்களுக்குக் கொடுத்தனர். சற்றேனும் சக்தி இல்லாவிடி

னும் நிர்ப்பந்தத்துக்கு உள்ளாகிச் சில வார்த்தைகளால் வந்தனத்தைக் காட்டி, அவர்களுடைய குடியேற்றக் கிராமங்களை அன்று ஆவிர்ப்பவித்த வேலாயுதக் கடவுள் கருணை கூர்ந்து ரக்ஷிப்பாராக என்று ஆசீர்வதித்து, விடைபெற்றுத் திரும்பினேன்.

பிரம குலத்திற் பிறந்த எனக்குத் தெய்வ காரியத்தில் புகுதற்கு உரிமை உண்டென்று அத்தனை மனிதரும் நம்பி, என் கையால் நாட்டப்பட்ட ஆயுதத்திற்குள் கடவுளின் தேஜஸ் நுழைந்ததாக அதைக் கொண்டாடிப் பூசித்தார்கள். இந்தப் பெரிய மோசத்தைச் செய்த எனக்கு என்ன தண்டனையோ! தரும சங்கடத்தில் அகப்பட்டு மீள முடியாமல் பாவம் செய்தேன் என்றால் மன்னிப்புக் கிடைக்குமா?

வெறும் இரும்பைச் சிரத்தையாகப் பூசித்தால் புண்ணியம் உண்டோ, இல்லையோ? ஒருகால் உண்டென்று சாஸ்திரம் ஒப்பலாம். புரட்டு மந்திரத்தை உச்சரித்து ஆகம முறைப்படி நடத்தியதாகக் காட்டியவன் என்னைப் போன்றவனே அன்று நடைபெற்ற காரியத்திற்கு உத்தேசித்த பலன் உண்டா? வியர்த்தந்தானே? அன்று கைகூப்பிப் புண்ணியம் பெற்றோம் என்று எண்ணியவருள் பெரும்பாலாருக்குப் பூசாரி ஸ்தானத்தில் இருந்தவனும், நானும் நூல்களில் விதித்த வழியாக நடத்தவில்லை என்பது நன்கு தெரிந்திருக்கும். ஆனால், 'நமக்கு என்ன? அவர் பாடு. பிழையானால் பிழை, நம்மைத் தொடராது. சிரத்தையைக் காட்டுவது நம் கடமை. அதைத் தவறாது காட்டினோம். சிரத்தைக்கு வேண்டிய சாதனங்கள் எல்லாம் ஒழுங்காயிருக்கின்றனவா என்ற கவலை நமக்கு ஏன்? சிரத்தை வேறொன்றை வேண்டி நிற்பதன்று' என்றே அவர்கள் நினைத்தார்கள்.

# இன்றைப் பொழுது : :
# : : போக வேண்டுமே!

**பெ**ரிய சாவடி போன்ற ஒரு கட்டடத்தில் தாழ்ந்த கூரையின்கீழ் ஒரு மூலையில் நாற்காலி ஒன்றில் நீண்ட சட்டை, தலைப்பாகை, கோட்டு இவை அணிந்துகொண்டு ஒருவர் உட்கார்ந்திருக்கிறார். அவர் முன்பாகப் பெரியதொரு மேஜை; அதன்மீது பிறரை அழைக்கும் மணி (Call bell), பெரிய கால அட்டவணை ஒன்று, எழுதுவதற்கு வேண்டிய சாமான்கள், இரண்டு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கும் ஓர் அகராதி, பாதி பார்த்தும் பாதி பார்க்காதும் இருக்கும்படியான அன்றைத் தபால்-இவைகள் இருந்தன. அறைக்குள்ளே நுழையுமிடத்தில் அவருடைய ஜோடும் குடையும் இருந்தன. அவருடைய வலது பக்கத்து மூலையில் ஒரு சிறிய மேஜை, அதன்மேல் ஒரு பெரிய ரிஜிஸ்டர், மைக்கூடு, பேனா-இவை இருந்தன. உடம்பில் கோட்டும் இல்லாமல் தலையில் குல்லாயும் இல்லாமல் கேவலம் காங்கிரஸ் உடுப்புப் போட்டவர்களாக ஒவ்வொருவராகவும் இரண்டிரண்டு பேராகவும் பலர் வந்து அதில் கையெழுத்திட்டுப் போகிறார்கள். வாஞ்சி ஐயர் முகத்தில் ஈயாடவில்லை. ஒரு சட்டை மட்டும் அணிந்திருந்த உபாத்தியாயர் சுப்பையா பிள்ளை, ஹெட் மாஸ்டர் மேஜையில் இரண்டு கைகளையும் வைத்துப் பேசுகிறார்.

**வாஞ்சி ஐயர்:** என்ன, ஊரில் ஏதாவது விசேஷம் உண்டா?

**சுப்பையா பிள்ளை:** இந்தச் சிறிய ஊரில் என்ன விசேஷம்! பள்ளிக்கூடத்தில்தான் ஏதாவது உண்டா

ஞல் உணடு. பள்ளிக்கூடம் திறந்து ஒரு வாரம் ஆச்சே. புது வாததியாா வந்தாாகளா?

வா புது வாததியாரையும் காணேம், ஒரு வரையும் காணேம்.

சு. பி என, நீஙகள சோமேனுககு விவரமாய எழுதவிலலையோ?

வா: பளளிககூடம் மூடுவதற்கு முந்தியே மூன்று வேலை காலியென்றும் அதில ஒன்றுககு ஹிஸ்டாி எல. டி. யும் மற்றொன்றுககு கெமிஸ்டாி எல. டி. யும் மூன்றுவதற்கு இன்டாமீடியெட படிததுப போதனு முறை பயினற நலல அநுபவமுளள வாததியாரும் வேணடுமென்றும், இவாகள பளளிககூடம் திறக்கும் பொழுதே வேலைக்கு வரவேணடுமென்றும் எழுதி, சோமேன் அநுமதி பெற்றுப் பததிாிகைகளில விளமபாமும் போடடு, கிடைதத மனுககளையெலலாம் என் சிபாாசுடன் அனுபபி மூன்று வாரம் ஆகினறன. இவவளவு பெரிய பளளிககூடத்தில மூனறு வாததியாா இலலையென்றால எப்படி வேலை நடககும்?

சு. பி இந்த முனிசிபாலிடியின் கீழ் நானூறு பிள்ளைகளைப் படிப்பிககும் பளளிககூடத்தை நடததும் ஹெடமாஸ்டா பாடு பொலலாப் பாடுதான்.

வா உஙகளுககு அடுதத மணி ஓயவு இருககிறது கொஞ்சம மூனறுவது பாரததைப் போயப் பாாததுககொளகிறீாகளா?

சு. பி: உங்களுககு என் ஓய்வுதான் கணணை உறுததுகிறதோ!

வா. போன வாரமெலலாம் உஙகளைக கேடகாமலேயே எபபடியோ சமாளிததேன். இந்த வாரம நீஙகள் தயவு செயயததான வேணடும்.

சு. பி: முதல் உதவி உபாத்தியாயா என்று பெயர்தான். ஓய்வும் கிடையாது; மரியாதையும் கிடையாது. அப்படித்தான் போக வேண்டுமானால், ஐந்தாவது பாரம் ஆறாவது பாரம் இல்லையா?

வா: ஐந்தாவது பாரத்திற்கு நான் போக வேண்டியிருக்கிறது. அதில் எனக்கு மற்றொரு காரியமும் இருக்கிறபடியால் நான் அதற்குப் போய் உங்களை மூன்றாவது பாரத்திற்கு அனுப்புவதாக உத்தேசித்தேன்.

சு. பி: உத்தேசந்தானே? உங்கள் மூன்றாம் பாரத்திற்கு நீங்களே போங்கள்.

சுப்பையா பிள்ளை வெளியே போகிறார்.

ஒரு பையனை இழுத்துக்கொண்டு ஓர் உதவி உபாத்தியாயா நுழைகிறார்.

வா: (தமக்குள்) ஒரு மணி அதிக வேலை செய்வதற்கு, முதல் வாத்தியாரே இந்தப் பாடு படுத்தி, 'அவரில்லையா, இவரில்லையா, நீங்கள்தான் இல்லையா!' என்றெல்லாம் கேட்பாரானால், நான் எப்படி வேலை பார்த்துப் போ சொல்லுகிறது?

உதவி உ: ஸார், இந்தப் பையன் வெகு துஷ்டனாயிருக்கிறான். கோணமாணவென்று கேள்விகள் கேட்கிறான். பாடம் படிப்பதில்லை. இவனால் மற்றப் பிள்ளைகள் கெடுகிறார்கள். இவனைச் சிக்ஷிக்க வேண்டும்.

வா: பொதுவாய்த் துஷ்டன் என்றால் போதுமா? என்ன குற்றம் செய்தான், சொல்லும்! என்ன சிக்ஷிக்க வேண்டும்? விவரமாய்ச் சொல்லும்.

உ. உ: என்னை வகுப்புக்கு முன்பாக அவமதிப்பாய்ப் பேசினான்.

வா: என்ன ஐயா! அங்கிருந்து இங்கு வருவதற்குள் மறந்து போச்சு, சொல்லுமே!

உ. உ: எனக்குச் சொல்வதற்கு நாணமாய் இருக்கிறது. ஆனாலும் உங்களிடத்தில் சொல்லியாகவேண்டும். 'வெற்றிலையுடன் புகையிலையும் போடுவானேன்? ஒரு நாளும் தவறுகிறதில்லையே?' என்று கேட்டான்.

வா: என்ன, இப்படி ஒருவன் திடீரென்று கேட்பானா! நீங்கள் அவனை ஏதாவது சொல்லிச் சீண்டினீர்களா?

உ. உ: நானொன்றும் சீண்டவில்லை.

வா: என்னடா அப்பேன், தங்கவேலு, என்ன நடந்தது?

தங்: (கண்ணீருடன்) ஸார், நான் வெற்றிலை போட்டுக்கொண்டு வந்தேன் கிளாசுக்கு 'பையன்கள் வெற்றிலை போட்டுக்கொள்ளக்கூடாது என்று சொல்லியிருக்கிறேனே! புத்தி இல்லையா? கடாவா, கழுதையா?' என்றெல்லாம் மிக்க கேவலமாய்ப் பேசினார் எனக்கு இவர் பிராம்மணராக இருந்தும் புகையிலை போடுவது சரியில்லை என்று மனசில் ஏற்கனவே இருந்தபடியால் இன்றைக்கு வந்த ஆத்திரத்தில் ஏதோ கேட்டுவிட்டேன்.

வா: என்ன ஐயா! பையன் சொல்லுவது நிஜமா, புரட்டா?

உ. உ: ஆனால் பையன் வெற்றிலை போட்டால் அதைக் கண்டிக்க வேண்டாமா? கண்டித்தால் அது ஒரு பிழையாகுமா? அதற்கு இப்படித்தான் துடுக்காய்ப் பேசுகிறதா?

வா: தங்கவேலு, நீ சற்று வெளியே போ.

[அவன் போன பிறகு]

வகுப்பில் இவ்வளவு கிளாசியைச் செய்துவிட்டு, பிள்ளையையும் இழுத்து வந்தீரே! 'இதைத் தனியாக வகுப்பு முடிந்த பிறகு என்னிடம் சொல்லலாகாதா?

இப்பொழுது எல்லாப பிளளைகளுக்கும் தெரியுமே? தஙகவேலு வயசான பையன. அவனை வாயில நோந்த படி யெலலாம் பேசினால ஒரு நாள அவன எதிரப் பானே என்று கொஞசமும் அசசம் வேணடாமா?

உ. உ பையனகளுககுப் பயந்துகொணடுதான் பாடம சொலலி வைகக வேணடுமோ!

வா அபபடியா நான சொன்னேன? பெரிய பையனைப பிரமபெடுதது அடிககலாமா? ஒரு ரூபாய, இரணடு ரூபாய அபராதம் எனறால இவனுாத தகப்பன மாாகள நம்மை வைப்பாாகளா?

உ. உ பெரிய பையனகளாயிருந்தால அடிககவும் கூடாது; அபராதமும் கூடாது. அவன் போன வழி தான வாததியாா போக வேணடுமோ!

வா நீஙகள சொலலுஙகளேன? இபபொழுது நான் என்ன செயயலாம்?

உ. உ. நானாக இருந்தால கையை நீடடச சொலலி உளளங கையில மூன்றடி பிரம்பால அடிபபேன.

வா அப்படியா! நீங்கள வித்தியா சாஸ்திரம் படிததிருபபீாகளே! நாம செயயும சிக்ஷையானது குற்றததிறகு ஏறறதென்று, சாமானியமாயப பிளளை களுககும், சிக்ஷிககபபடும் பிளளைகளுக்கும் ஒருவாறு தோன்ற வேணடும எனபாாகளே? இன்றைககு வகுப் பில நடந்ததைப பாாதத பிளளைகள, 'தஙகவேலு செயதது கடுங குற்றநதான்; பிரம்படி வாங்க வேணடி யதுதான' எனறு சொலலுவாாகளா?

உ. உ. (கோபத்துடன்) ஓகோ! இப்படியா இருக்கு தஙகவேலு ராஜ்யம்! எனனை அடிககாமல விடடால போதும்! நான் போகிறேன.

வெளியே போகிறாா.

ஒரு குண்டல தீக்ஷிதரும் சுமார் பதினைந்து வயதுள்ள ஒரு பையனும நுழைகிறார்கள்.

வா: வரவேணும், தீக்ஷிதர்வாள், ஏது அபூர்வமா யிருக்கிறது! உட்காருங்கோ!

தீ: ஒன்றும் இல்லே... இந்தப் பையன் விஷயமாக வந்தேன்.

வா. என்ன! பையனை அனுப்பிறைல போராதோ? என்னடாப்பா, சோமசுந்தரம்!

தீ: இந்தப் பையனுக்குப் பிரமோஷன் கிடைக்கலே. பட்டணத்திலே என மருமகன வீட்டிற்கு அனுப்பி விடலாம் என்று நினைக்கிறேல லீவிங சாட்டிபிகேட்டுக் கேட்டு வாங்கினேன். அதில பிரமோஷனுக்குத் தகாத வன என்று போட்டிருக்கிறது. அது விஷயமாயததான் உங்களை ஒரு வார்த்தை கேட்க வேணடுமென்று வந்திருக்கிறேன்.

வா: என்ன விஷயம்?—எனப்பா சோமசுந்தரம், உனக்கு ஒரு பாடத்திலகூட வேணடிய மார்க்குக கிடைக்கவிலலேயே! உன்னைப் பிரமோஷன் செய்ய லாமா?

தீ: எலே, நீ ஒண்ணும் சொலலாதேடா; நான் பார்த்துககறேன். நீங்கள பிரமோஷன் செயயாத தற்குத தகுந்த காரணங்கள சொலலுகிறீர்கள். உணமைதான. இவன மேல வகுப்பில படித்தால பிரயோஜனம் இலலே என்றுதானே? அந்தச சங்கடம் உங்களுக்கு இலலாமல் நான் அவனை வேறு இடத்திற்கு அனுப்பிவிட்டால பிரமோஷனுக்கு லாயககுததான் என்று எழுதிக கொடுக்கலாகாதா?

வா: ஐயையோ! தலே போய்விடுமே! இவவளவு பெரியவர்கள பொய் சொலலச சொலலுகிறீர்களே!

தீ: இது ஒரு பொயயாகுமா? ‘பிராம்மண விஷயமாயப பொய் சொனனல பொயயலல’ எனறு ஸ்மிருதியில சொலலியிருககிறதே!

வா: அந்தப பழைய தாமமெல்லாம் இந்தக் காலததிறகு உதவுமா? மேலும் நீஙகள சாஸதிரம் தெரிந்தவாகள. பிராம்மணனுககாகப பொய சொலல லாம் எனருல, பிராம்மணனுககு உயிரச சேதம் வரும் போலிருந்து ஒரு பொய சொனனல அவனை அதி லிருந்து தபபிககலாம் எனறு நிசசயமாயத தெரிந் தால மட்டுந்தான சொலலலாம் எனறு அாததமே ஒழிய, இம்மாதிரி அற்பக காரியங்களுககெலலாம் பொய சொலலலாம் என்று அாததமாகுமா?

தீ: நான் உஙகளுடன் சாஸ்திர விஷயமாய விவாதம் செய்ய வரவிலலை. சாஸதிர சமபிரதாயம் தெரிந்தவாகளுடன்தான இந்தக கட்சி பேசலாம் அது நிற்கட்டும். இநதச சாட்டிபிகேட்டில கொஞ்சம் மாற்றிக் கொடுஙகள.

வா: ஆனல ஒரு சினன விஷயததில பொய் சொலலலாமா எனறு தெரிந்துகொளவதறகுச சாஸ் திர நியாயஙகளெலலாம தெரிய வேணடுமோ! ‘விபரஸய சாாததே’ எனறுதானே இருககிறது? இதற்கு ஒரு பிராம்மணன தனககெனறு, பொய் சொலலச சொன்ன பொழுதெலலாம் பொய சொலலி வந்தால ஊரில நிஜமென்று ஒன்று இருககுமோ!

தீ: இப்பொழுது உங்கள ஸ்கூலுககு நான் ஒன்றும் கெடுதல் சொலலவிலலையே! இநதப் பையன் உஙகள் ஸ்கூலுககு லாயககிலலை எனறீாகள. வேறு பளளிககூடததுககுப் போய அவன முனனுககு வருவ தில உஙகளுககு என்ன சஙகடம்?

வா: நலலது, நீங்கள் பொறுங்கள். பையனை ஒரு வாாததை கேட்கிறேன்...எனடா அப்பேன், இஙகே

நாலாவது பாரததில சமாளிககாதவன் நீ; சென்னப் பட்டணம் ஸ்கூல்களில் இரணடாயிரம பிளளைகள படிககுமிடததில போய, ஒருவருடைய கவனமும் கவலையும் இல்லாமல நீயே ஐந்தாம் பாரததில் பாடங் களைப் படிப்பாயா? உனககுத தைரியம் இருக்கிறதா? சென்னப் பட்டணம் போகிறேன் என்று ஏன் பிடிவாதம் பணணுகிறாய்?

சோ ஐயோ ஸார்! நான் பிடிவாதம் புணண வில்லையே! என்னை இப்படித்தான் வருஷநதோறும் பிரமோஷனுககு லாயக்கிலலாதபொழுது சிபாரசுக ளெலலாம் செயது பிரமோஷன் பணணி வநதாாகள. இதனாலதான் என படிபபு உபயோகமற்றுப் போய விட்டது. எஙகேயாவது இரணடாம் பாரம், மூனறும் பாரததில் இனனொரு வருஷம் போட்டிருந்தால சரிப் பட்டிருககும் இனி மோசந்தான!

வா: கேட்டீாகளா? பையன நலல புத்திமான். அவனை வீணாகக கெடுததுவிட்டீாகள. தூககித தூககி விட்டுப் படிப்பு வருமா? சாராஜ்யம்கூடத தெரியாத பிள்ளைககு மீமாம்ச சாஸ்திரம் சொலலி வைககலாமா? நாலாவது பாரததில இனனொரு வருஷம் போட்டுப் பாருஙகள. பிளளை கவலையாயப படிககிறவனாதலால ஒரு கால கோணல நிமிாநதாலும் நிமிரும்.

தீ இதற்குத்தான் இந்தப பயலை என்கூட வர வேணடாமெனறு சொன்னேன். வந்து கழுததை அறுககிறான. போவோம் வா, சணடாளப் பயலே, போ!

(போனாாகள.)

ஹெட்மாஸ்டா முதல மணி மட்டும் பள்ளிக் கூடக காரியஙகளைப் பாாததுவிட்டுப் பிறகு உளள பொழுதெலலாம் ஓயவாயிருந்த வகுப்புக்களில போய்ப்

பாடம் சொல்லிவைத்து இடை வேளையில் நாலைந்து உபாத்தியாயர்களுடன் உட்கார்ந்து பேசுகிறார்.

வா: நான் அவ்வளவாகச் சகுனம் பார்க்கிறவன் அல்ல. ஆனாலும் இன்றைக்கு வரும்பொழுது குள்ளச் சுப்பி எதிரில் வந்தாள். வீட்டில் எஜமானி, 'சற்று வந்து உட்கார்ந்துவிட்டுப் போங்களேன்' என்று சொன்னாள். 'போடி பைத்தியம், நடக்கிறது நடக்கட்டும்' என்று வந்துவிட்டேன். இன்று காலமே நடந்ததெல்லாம் விபரீதமாக இருக்கிறது. சாயந்தரம் என்ன நடக்கப் போகிறதோ? இன்றைப் பொழுது போகவேண்டுமே!

முதல் உபாத்தியாயர்: என்ன உங்களுக்கு? மூணு வாத்தியார்தானே வேணும்? உள்ளூரிலேயே மூன்று பேர்கள் இருக்கிறார்களே? போட்டடிச்சுண்டு போறங்கோன்னுக்கே? இதற்கெல்லாம் மேலதிகாரி உத்தரவு வேணுமென்று பார்த்தால் ஒரு யுகமாகும்.

இரண்டாம் உ: உமக்கு என்ன! நீர் விளையாட்டாய்ச் சொல்லிப் போகிறீர். நாளைக்குக் கமிஷனர், 'அவனை ஏன் நியமித்தீர்? இவனை ஏன் நியமித்தீர்?' என்று கேட்பானே! யார் ஜவாப்புச் சொல்லுகிறது?

மு. உ: "பள்ளிக்கூடம் திறந்தாய் விட்டது. பிள்ளைகளுக்குப் பாடம் நடக்க வேண்டாமா?" என்பதற்கு யார் ஜவாப்புச் சொல்லுகிறது?

மூன்றாம் உ: இப்படி ஜவாப்புச் சொல்லிப் பிழைக்கலாமா? நம்ம கமிஷனர் பச்சை மிளகாயாச்சே?

வா: ஐயா, ஓர் எஜமானனாக இருந்தால் ஒரு வேளை சொல்லிப் பிழைக்கலாம். பதினாறு பேருக்குப் பதில் சொல்லி யார் தப்பிக்கிறது? கௌன்சிலர் எல்லோருமே பள்ளிக்கூட விஷயங்கள் தெரிந்தவர்கள் என்றும், நியாயம் வழங்கும் சக்தியுள்ளவர்கள் என்றும்

எண்ணியிருக்கிறார்கள். ஒரு வருஷத்தில் மூன்று நான்கு வாத்தியார்களைத் திட்டம் செய்ய அவகாசம் இருக்கும்பொழுது அவர்கள் தங்களை வந்து பார்ப்பதும், பெரிய மனிதர்களிடமிருந்து கடிதம் கொண்டு வந்து கொடுப்பதுமாக இருக்க, 'இன்னும் இரண்டு நாள் பொறுத்து வாருங்கள்; இன்னும் ஒரு வாரம் செல்லுமையா; இன்னும் பள்ளிக்கூடம் திறக்கவில்லையே' என்றெல்லாம் பதில் சொல்லி அனுப்பவும் தங்களுக்கெல்லாம் அதிகாரம் வாய்த்தது என்று மார்தட்டிக்கொண்டிருக்கிறார்களே! நான் நியமித்து விட்டால் என் தலையைக் கிள்ளிவிடமாட்டார்களா!

மு. உ: அதிருக்கட்டும், இன்னும் ஸ்கூல் பாட புஸ்தகங்கள் என்னவென்று சொல்லவில்லையே! பிள்ளைகள் கேட்கிறார்கள், 'என்ன புஸ்தகம் வாங்க வேண்டும்?' என்று. நாங்கள் என்ன ஜவாப்புச் சொல்லுகிறது?

வா: சரி! அது ஒரு வயிற்றெரிச்சல்! அதைக் கிளப்பிவிட்டீர்களா?

நான்காம் உ: (கோபத்துடன்): ஏன்! உள்ளதைச் சொல்லுங்களேன! சேர்மேன், கமிஷனர் இவர்கள் புஸ்தகப் பதிப்பாளர்களுடன் பேரம் செய்து முடியவில்லை.

மு. உ: ஐயோ! அதை எல்லாம் சொல்வார்களா?

நா. உ: நீங்கள் சொல்ல வேண்டுமாக்கும்? இந்தக் கதை ஊரெல்லாந்தான் நாறுகிறதே? சேர்மேன் இரண்டு வாரமாகப் பட்டணத்திலேயே வாசஞ் செய்கிறார்.

வா: இனிமேல் அவர் வந்து புஸ்தகங்களை நியமித்து நாம் பிள்ளைகளுக்கு வரவழைத்துக் கொடுத்துப் பாடம் சரியான முறையாய்த் துவக்குவதற்கு இரண்டு வாரமாகிலும் பிடிக்காதா?

இ. உ இரண்டு வாரத்தில ஆனல பெரும் அதிருஷ்டம! ஒரு மாதம் பிடிக்குமென்று எனக்குத் தோன்றுகிறது.

நா. உ (கோபத்துடன்) ஒரு மாதமா! இந்தப் பள்ளிக்கூடத்தில பாடம் சொலலிக் கொடுத்துச் சந்தியிலே போக வேணடியதுதான்!

(போகிறுா.)

சாயந்தரம் மூன்றரை மணி. வாஞ்சி ஐயா ஒரு வகுப்புக்குப் போயவிட்டுத தம் அறைக்கு வருகிறுா. அங்கே முனிஸிபாலிடி அங்கத்தினா ஒருவா, செல வாக்குள்ளவா, கொஞ்சம் வாயாடி, உட்காாந்திருக் கிறுா. ஹெட்மாஸடரைக் கணடதும் எழுந்திருந்து கும்பிட்டு அவா உட்காாநத பிறகு தாம் உட்காாந் தாா.

வா ஏது! பள்ளிக்கூடத்தில படிதத போதிருந்த மரியாதை இன்னும் விடவிலலையா! நலல பிளளையபபா நீ!

கேள: அதென்ன அப்படிச் சொலலுகிறீாகளே! என்ன இருந்தாலும குரு விசுவாசம் எனபது போகுமா? எஙகள தலை முறையிலேயே கிடையாது; நீஙகள உறுதியாய வைததுககொளளுஙகள.

வா மிகவும் சந்தோஷமப்பா. பரிகாசமாய்ச் சொன்னேன். என்ன விசேஷம இஙகே வநதது?

கேள விசேஷம் ஒன்று உணடு. நீஙகள தயவு செயது உதவி புரியவேணடும்.

வா அதற்கு என்ன தடை? முடியுமானுல் கடமைபபட்டிருககிறேன

கேள சுறறிச சுறறிச சொலலாமல உடனே சொலலி விடுகிறேன். நம்முடைய உதவி உபாத்தி

யாயர் முருகந்த ஐயங்கார் இருக்கிறாரே, அவருக்குச் சம்பளம் கட்டவே இல்லையாம். ஐந்து ரூபாயாவது உயர்த்திக் கொடுக்கவேண்டுமென்று மிகவும் வேண்டுகிறார். அதற்குத் தாங்கள் பலமாய்ச் சிபாரிசு எழுதிக் கொடுத்தால்தான் பலிக்கும்.

வா: இப்பொழுது இது அவ்வளவு எளிதான காரியம் அல்லவே. இப்பொழுது உபாத்தியாயர் சம்பளங்களை மாற்றுவதற்குக் காலம் இல்லை. உங்கள் பட்ஜெட்டெல்லாம் முடிவு பெற்றது. இனி ஓர் உபாத்தியாயரைப் பற்றிச் சிபாரிசு செய்வது முறையல்ல.

கேள: நீங்கள் சொல்லுவது சரிதான். ஆனால் கமிஷனர் ஒப்புக்கொள்வார்போல் இருக்கிறது. பள்ளிக்கூடக் கமிட்டியாரும் இதில் அபிப்பிராயம் உள்ளவர்களாகத்தான் இருக்கிறார்கள். கொஞ்சம் கஷ்டப்பட்டாவது நிறைவேற்றலாம் என்று நம்பியே வந்திருக்கிறேன்.

வா: அப்படியா! இவ்வளவு தூரம் இதைப் பற்றி அதிகாரிகளே பேசிக்கொண்டாகிவிட்டதா? இது முறை அல்லவே? எனக்குத் தெரியாமல் என் உதவி உபாத்தியாயர் உங்களிடமெல்லாம் வந்து இவ்வளவு கிளர்ச்சி பண்ணிவிடலாமா? இப்பொழுது முடியாதென்றால் நான்தானே பொல்லாதவன்?

கேள: ஏன் முடியாதென்று சொல்லவேண்டும்?

வா: இந்த ஓர் உபாத்தியாயரைப்பற்றி மட்டும் ஒழுங்கு தவறிச் சிபாரிசு செய்ய வேண்டுமானால் தகுந்த காரணங்கள் சொல்லவேண்டுமே?

கேள: தகுந்த காரணங்கள் உண்டே! சம்பளம் சிறிது; குடும்பம் பெரிது; சாமான்களெல்லாம் விலை அதிகம்; உபாத்தியாயர் கெட்டிக்காரர்; நன்றாய்ப்

போதிக்கிறார்; ஊரில் எல்லோருக்கும் தெரிந்தவர். இவ்வளவு போதாதா?

வா. குடும்பம் பெரிது - யாருக்கு இல்லை? சம்பளம் சிறிது - யாருக்கு இல்லை? சாமான் கிராக்கி - யாருக்கு இல்லை? இவை யெல்லாம் முகுந்த ஐயங்காருக்கு மட்டும் எப்படி விசேஷமானவை?

கேள. அதெல்லாம் பொதுவாயிருந்தாலும் அவரைப் பற்றி விசேஷித்துச் சிலாகித்து எழுதலாம் அல்லவா?

வா. அப்படி ஓர் உபாத்தியாயரைப்பற்றி அகாலத்தில சம்பள உயர்வுக்காக எழுதி நான மற்ற உபாத்தியாயர்களிடத்தில எப்படி வேலை வாங்குகிறது? நீ சொல்லும் குணங்கள அவர்களுக்கெல்லாம் இல்லையா?

கேள: அதென்ன அப்படிச் சொல்லுகிறீர்கள்? ஊரில விசாரித்துப் பாருங்கள. 'பகுஜன வாக்கு' என்று ஒன்று உண்டு அல்லவா? 'ஆபால கோபாலம்' விசாரித்தால இந்தப பள்ளிக்கூடத்துக்குள முகுந்த ஐயங்கார்தாம் சிலாக்கியமானவர், திலகம் போனறவர் என்பார்கள்.

வா: அப்படியா! நான் இந்த ஊரில்தானே இருக்கிறேன்! என காதில படவில்லையே?

கேள எனக்கு அது ஆச்சரியமாயிருக்கிறது. அவ்வளவு தூரம் நான் அவரைப் பாராட்டுவது உங்களுக்குப் பிடிக்கவில்லையாக்கும்?

வா. எனக்கு என்ன அதில வருத்தம்? இந்தப் பள்ளிக்கூடத்தில நம்முடன் உழைப்பவர்களில ஒருவருக்காவது, 'மாசிலாமணி' என்று கீர்த்தி கிடைத்தது என்றால பெருமையா? என் சொந்தப் புகழாகவே நினைப்பேன்.

கேள: ஆனல் நீங்கள என்ன சொலலுகிறீாகள்? நான் சொலலுகிறபடி மஹா ஜனங்களுடைய கொளகை இலலை என்று?

வா: (கொஞ்சம் ஸ்வாததை எற்றி) ஆம், ஆம்! ஊா அபிபபிராயம் உனககுத தெரியாது. எனக்கு நன்றாயத தெரியும்.

கேள: அபபடியா! இதென்ன வேடிக்கை! எஙகள கௌனசிலர்களுககு இல்லாத அபிப்பிராயம் ஊரில் இருககுமா?

வா: நான் சொலலுகிறேன், கேள. கொஞ்ச காலம் என்னிடம் படிததத்தால கொஞ்சமாகிலும் அன்பு இருககுமென்று நம்பிச சொலலுகிறேன. ரகஸயமாய வைததுககொள. என்ன, உன்னை நம்பி ரகஸ்யததைச சொலலலாமா?

கேள: சொலலுஙகள, பாவாயில்லை.

வா: இந்த முகுந்த ஐயஙகாா கொஞ்சமேனும் கடமை இன்னதென்று நினையாதவா. கடவுள் அவரைச் சிருஷடிககும்பொழுதே மனச்சாடசியை வைகக மறந்து விடடாா என்று நினைககிறேன். வகுபபுகளுககுச சரியான காலததில் போகிறதிலலை. வீடடில பாடங களைப் பாாககிறதிலலை. பிளளைகளின் அபபியாச புஸத கஙகளைப் பாாககாமல் கையெழுததுப் போடுவது வழககம். அவா சொலலி வைககும பாடஙகளெலலாம் பிளளைகளுக்குச சரியாக வருகிறதில்லை நான் அடிககடி வகுபபில போய நடந்த பாடஙகளையே கேடடுப் பரீக்ஷிததிருக்கிறேன் முககியமான அம்சஙகளெலலாம் சொலலிக கொடுததததாகவே தெரியவிலலை. பிளளை களுககும் அவருககும பிரீதி என்பதே கிடையாது. பொழுது விடிந்தால உஙகள வீடுகளுககெலலாம் நடையாக நடந்து உங்களைத தப்பு ஸ்தோததிரமெல்

லாம் செயது உஙகளுடைய தயவைச சம்பாதிப்பதில மட்டும் சாமாததியமுடையவரே தவிர, பள்ளிககூடத் திற்கு அவரால உபயோகம் இலலை. எனன செய்ய லாம? ‘அவா பாடஙகளை வேறு ஒருவரைக கொணடு சொலலி வைககவும் முடியாது; நாமும் சொலலி வைப்பது அழகலல’ என்று கவலைப் படடுக்கொண டிருககிறேன். அவருககா நான் அநியாயமான சிபாரிசு செயகிறது? தெயவததுககு அடுககுமா!

கேள இவவளவு மோசமானால என காதில் படடிருககாதா? உஙகளுககு ஏதோ அவரிடம் மனஸ் தாபம். நான் பாாததிருககிறேன்: என அநுபவததில உபாததியாயாகளுககுள சணடை சசசரவே அதிகம. ஒருவரை ஒருவா தூஷிததுப் பிழைதது வருகிறாாகள. தாஙகளாவது ஹெடமாஸடரான பினபு எலலாரிடத திலும ஒரே மாதிரியான திருஷடி வைதது வருவீாகள எனறு எணணினேன. நலலது; இவவளவு தூரம் முகுந்த ஐயஙகாரைத தூஷிததது பிரயோசனம் இலலை; அவரால பளளிககூடததிற்குக கேடு உணடு எனறு சொலலுகிறீாகளே, இது உங்கள மனச சாடசிககு ஒததததா? உணமையாக இருந்தால எஙகளுககு அவரைப்பறறிப புகாா எழுதி, நீககக் வேணடியதறகு ஏற்பாடு ஏன செயயவிலலை?

வா \சரியாயப போசசு! அவருககுச சிபாரிசு கேடக வநதவன, என்மேல குதிரை ஏறுகிறாயா? அவர் மீது நான உனனிடம். புகாா செயயவிலலையே! நீ மற்ற வாகளைக காடடிலும் அதிகபபடியாக அவரைக கொணடாட வேணடுமெனறு கேடடாய! அதனால் ‘நான பொய சொலலி எழுதமாடடேன், தபபான சிபாரிசு செயயத தகாது’ என்பதற்கு வேணடிய முகாந்த்ரஙகள சொன்னேன். அவாமேல புகாா செயய வேணடுமென்று நிாப்பந்தம் வந்துவிடடால புகாா செயய எனககுத தெரியும்!

கேள: ஆனால் முடிவு என்ன? நாங்கள் எல்லாரும் அறியாதவர்கள்: அநியாயத்திற்குத் துணிந்தவர்கள், நீங்கள் மாத்திரம் தர்ம புத்திரர் என்று சொல்லுகிறீர்களா?

வா: ஐயோ! நான் அப்படியெல்லாம் சொல்லவில்லையே! அப்படியெல்லாம் நினைக்கவும் இல்லையே! உலகத்தில் பெரும்பாலும் அதிகாரம் வந்தால் அதனுடன் கூடச் சில உபத்திரவங்களும் வரும். முக்கியமானது என்னவென்றால் கோள் சொல்கிறவர்களும் தப்பு ஸ்துதி செய்கிறவர்களும் காக்காய் பிடிக்கிறவர்களும் வீட்டைச் சுற்றியே பல்லைக் காட்டி நிற்பார்கள். இவர்களுக்குள் படித்தவர்களும் உண்டு. படியாதவர்களும் உண்டு. படியாதவர்களைக் காட்டிலும் படித்தவர்கள் மிகக் கேடு கெட்டவர்கள். புத்தியுள்ளவர் இவர்கள் சொல்வதைக் கேட்டு முற்றும் நம்பாமல் செவ்வையாக ஆங்காங்கு விசாரித்து உண்மையைத் தெரிந்துகொள்ளவேண்டும். இப்பொழுது நான் உன்னிடம் ஒளிக்காமல் முற்றும் உண்மையைச் சொல்லியிருக்கிறேனே! நீ வேறு அபிப்பிராயம் கொண்டவன். மற்ற உபாத்தியாயர்களையும் முகுந்த ஐயங்காரிடம் பாடம் கேட்கும் பிள்ளைகளையும் அந்தப் பிள்ளைகளின் தகப்பன்மார்களையும் கேட்பாயானால் உண்மை தெரியும். என் மீது கோபம் கொள்ளாதே. இது ரகஸ்யமாகவே இருக்கும் என்று முன்பே வாக்களித்திருக்கிறாய்!

கேள: நான் வந்த சமயம் அநுகூலமான சமயம் அல்ல. பிறகு, இந்தப் பேச்சை முடிப்போம். இது நிற்கட்டும். நான் போய் வருகிறேன்.

(போகிறார்.)

ஒரு பையன் விம்மி விம்மி அழுதுகொண்டு ஓடி வந்து பேச முடியாமல் நின்றான்.

வா: என்ன சுந்தரம், நீ நல்ல பிள்ளையாச்சே! உனக்கென்ன சங்கடம்?

சுந்தரம், "ஸார்!" என்று துவக்கி மேலே ஒன்றும் சொல்லாமல் மறுபடியும் அழுதான்.

வா: (அவனை முதுகில் தட்டிக்கொடுத்து) கொஞ்சம் பொறு; அவசரமில்லாமல், தைரியப் படுத்திக்கொண்டு சொல்!

சுந்: லைபாரிரியிலிருந்து ஒரு புஸ்தகம் வாங்கிப் போனேன். அது ஏற்கனவே கிழிந்து போயிருந்தது. என் வீட்டில் என் தம்பி அதை மீண்டும் கிழித்து விட்டான். லைப்ரேரியன் புஸ்தகத்தின் புது விலையைக் கொடுக்கவேண்டும்; ஒன்றேகால் ரூபாய் அபராதம் என்கிறார்.

வா: அப்படியா! அதுதான் சட்டம் அப்பா. என்ன செய்யலாம்?

சுந்: நீங்கள் மன்னித்துக் கொள்ளுங்கள், ஸார்! என் தகப்பனார் செய்திதான் உங்களுக்குத் தெரியுமே? ஒன்றே கால் ரூபாய் அவரிடம் கிடைத்து எனறைக்குக் கொடுபடும்?

இதற்குள் லைப்ரேரியனும் நுழைந்தார்.

வா. என்ன ஐயா, பெரிய கேஸ் பண்ணிவிட்டீர் களே?

லைப்: நான் என்ன செய்யலாம்? அந்த எழவு சட்டந்தான்! புஸ்தகம் இருபத்து நாலு. அதில் மூந் நூறு ஒன்றுக்கும் உதவாத கந்தல். இவைகளைக் குழந்தைகளுக்குக் கொடுத்துச் சரியானபடி திருப்பி வாங்க முடியுமா? புது விலை கேட்பது அநியாயந்தான். ஓரணாப் பெறாத புஸ்தகத்தைக் கொடுக்கிறது; இரண்டு ரூபாய் மூன்று ரூபாய் அடித்துப் பிடுங்குகிறதா?

வா: நீங்கள் சொல்லுவது நியாயந்தான். இதற்கு வழிதான் என்ன?

லைப்: இந்தச் சட்டத்தை அடித்துவிட்டால் போகிறது. இதை யார் போட்டார்?

வா: ஐயோ! அதில் விரலை வைத்தால் கையை வெட்டிவிடுவார்கள். பள்ளிக்கூடக் கமிட்டியார், நான் வேண்டாம், வேண்டாம் என்று ஆக்ஷேபிக்கும் பொழுதே மற்றப் பள்ளிக்கூடத்து லைப்ரரி சட்டங்களைப் பார்த்துப் போட்டுவிட்டார்கள்.

லைப்: ஆனால், நீங்கள் மன்னித்துவிடுங்களேன். அதற்காவது அதிகாரம் உண்டோ, இல்லையோ?

வா: இப்பொழுதுதானே நீங்கள் சொன்னீர்கள், பாதிக்கு மேலான புஸ்தகங்கள் உபயோகமில்லை என்று! சட்டம் இருக்கிறது. நீங்களோ அபராதம் போட்டுக்கொண் டிருக்கிறீர்கள். வந்த பிள்ளைகளுக் கெல்லாம் நான் மன்னிப்பையும் கொடுத்தால் அதென்ன சட்டம்? பள்ளிக்கூடக் கமிட்டியாருக்குத் தெரிந்தால் அவர்கள் என்ன சொல்வார்கள்?

லைப்: இது பெரிய தொல்லைதான். இப்பொழுது என்ன செய்கிறது? சுந்தரம் நிற்கிறானே?

வா: இதற்கு ஏதாகிலும் ஒரு வழி தேட வேண்டியதுதான். இப்பொழுது என்ன செய்யலாம்? சுந்தரம் ஏழை; நல்ல பையன்; அவனிடம் அபராதத்தை எதிர் பார்ப்பது சரியல்ல.

இவ்வாறு சொல்லிக்கொண்டு மேஜையின் மேலிருந்த கைப் பெட்டியைத் திறந்து லைப்ரேரியனிடம் ஒன்றே கால் ரூபாயைக் கொடுத்தார்.

லைப்: இப்படி நீங்கள் கொடுத்துக்கொண்டே வந்தால் சம்பளத்தில் பாதி ஆகிவிடுமே.

வா. தீராத சமயஙகளில் நாம் கொடுததுததான ஆகவேணடும். சுந்தரம, நீ வீடடுககுப் போ. தகபபனு ரிடம் சொலல வேணடாம்.

வாஞ்சி ஐயா அன்று பளளிககூடம் விடட பிறகு வீடு போகும்பொழுது மறுபடியும் குளளிசசுப்பியைக கணடார.

குள்ளிச் சுப்பி: ஐயோ! காலையிலும் கணடேனே, இபபொழுதும் கணடேனே, என்னால ஏதேனும் கேடு உணடோ?

வா விசேஷமிலலை அம்மா! ஏதோ உததியோகத் திறகுளள உபததிரவஙகளே தவிர வேறிலலை

குளளி இந்த ஊருககுள நீஙகள ஒருவரே என்னைக கணடு சுமுகமாயப் பேசுகிறீரகள! உஙகளுககு ஒரு கேடும் வரககூடாது.

வா: ஒரு கேடும் வந்து விடவிலலை. வரும்போல் இருக்கிறது. வந்தாலும பரவாயிலலை. பெருங கேடு வநதாலும் சிலா சொலவது உணடே, 'இதைவிடப பெருஙகேடு உணடே; இந்த மடடில தெயவம் நமமை விடடுவிடடதே என்று திருபதியடைய வேணடும்' என்று. இன்றைப பொழுது இததுடன போனது!

# பங்காளிக் காய்ச்சல்

## 1

சாயங்காலம் ஐந்து மணிக்கு அழுமாட்டாமல், துக்கத்தால் முகம் வாடியவனாய், பள்ளிக்கூடத்திலிருந்து திரும்பியவுடன், அனந்தராமன், தன் தாயிடம் ஒரு விஷயம் சொல்ல வேண்டும் என்று கேட்டான். ஒரு நாளும் இல்லாத கோலத்தைப் பார்த்துக் கவலைப்பட்டு அவள், "என்னடா அப்பா?" என்று வினவினாள்.

"இன்று வகுப்பில இங்கிலீஷ்ப் பாடம் நடக்கும் போது, ஓர் அபூர்வ வார்த்தை 'வென்டெட்டா' (Vendetta) என்று வந்தது. இதற்கு அர்த்தம் சொல் லும்போது, நம்முடைய குடும்பத்தை உதாரணமாக உபாத்தியாயர் எடுத்துக் காட்டினார். வகுப்பில் எல்லா ரும் திகைத்துவிட்டார்கள். என்னையும் பெரியகத்துச் சுப்பராமனையும் பார்த்துப் பார்த்துக் 'குசு குசு' என்று பையன்கள் பேசிக்கொண்டார்கள். பள்ளிக்கூடம் விட்ட வுடன் எங்கும் நிற்காமல் சுப்பராமன் வீடு போய் விட்டான். நானும் வந்துவிட்டேன். இதேன் நமக்கு இவ்விதக் கெட்ட பெயர்?" என்று அனந்தராமன் கேட்டான்.

"அந்த இங்கிலீஷ் வார்த்தைக்கு என்ன அர்த்தம் சொல; அது தெரிந்தால்தானே விஷயம் புரியும்?" என்றாள் தாய.

பிள்ளை சொன்னதாவது: "ஐரோப்பாவின் தென் கிழக்குப் பகுதியில சில தேசஙகளில் ஒரு கொடிய வழககம் உணடாம். தலைமுறை தலைமுறையாய் ஒருவ ருக்கு ஒருவர் பழிக்குப் பழி வாங்கிக்கொணடு, நூறு வருஷம் இரு நூறு வருஷங்கூட ஆண், பெண்,

குழந்தை எல்லாமே பகை பாராட்டுவார்களாம்! உபாத்தியாயா இதைச் சொல்லிவிட்டு, உடனே, 'நம் மூரில பெரியாத்துக்கும் சின்னாத்துக்கும் இருப்பது போல' என்றூ."

"அப்படியா? உங்களுக்கு வெட்கமாய்த்தான் இருந்திருக்கும். அவா ஏன் அப்படிச் சொன்னார்? நன்றாய இல்லையே!" என்று தாய கூறவே அனந்த ராமன், "அவா வேண்டுமென்று கூறவில்லை; ஏதோ சடடென்று உபமானம் தோன்றிச் சொல்லிவிடடார்" என்றான்.

"அப்படித்தான் இருகக வேணடும். எல்லாருக்கும் தெரிந்த கதைதானே! முழுப் பூசினிக்காயைச் சோற்றில் மறைக்க முடியுமா?" என்றாள் தாய.

"ஏதோ கொஞ்சம் கேட்டிருக்கிறேன். இனி விஷயம் விவரமாயத தெரிய வேணடும். சொல்லு வாயா?" என்று கேடடான் அனந்தராமன். அதற்கு மேல அனந்தராமனுடைய தாய் நினைத்து நினைத்து, விடடு விடடுச் சொலலிய கதையை அவள் மொழியாகவே எழுதுவோம்:

"சுமார் அறுபது வருஷத்திற்கு முன், வடக்கே யிருந்து, சோழநாட்டில் செழிப்பு உணடு என்று கேள்விப்படடு, இவ்வூருக்குச சாமாவையா என்ற ஒருவர் தம் பால சம்சாரததுடன் வந்து குடியேறினா ராம். அவர் அதிருஷ்டம் தொட்டதெல்லாம் பொன்னா யிற்று. பதினைந்து வருஷத்துக்குள் பெரும் சொத்துச் சேர்த்துவிட்டார். அவா தாம் நம்முடைய கூடஸ்தர். அவருக்கு இரண்டு பிள்ளைகள். வெகு காலம் ஒற்றுமை யாக இருந்து கடைசியில சணடை போட்டுப் பிரிந்தார் கள். இதற்குக் காரணம், தம்பிக்கு இளையாளாக வந்தவள்தான். அவள் கைகேயியாம்! இரணடு தம்பி களுடன் குடும்பத்தில் ஆக்கிரமிதது, வீட்டில எல்லா ருடனும் போராடி ஆஸ்தியை அழித்தாள். மைத்துன

னுக்கு அறுபது வருஷச் சாந்தி நெருங்கி, தக்க ஏற்பாடு கள் செய்து வரும்பொழுது, திடீரென்று இரண்டு நாள் முன்னதாக மார்பு அடைத்து அவர் இறந்து போய்விட்டார். அதற்குக் காரணம் அந்தக் கைகேயி தான் என்றும், ஏதோ சூன்யம் வைத்து ஏவிவிட்டாள் என்றும் வதந்தி ஏற்பட்டது. இதனால் இரண்டு குடும் பங்களுக்கும் பெரிய கலகம் ஆரம்பித்தது. இறந்தவரின் பிள்ளைகள், 'விட்டேனா பார்' என்று கறுவிக்கொண் டிருந்தார்கள். அதற்கு ஏற்றாற்போல், சின்னவருக்கு ஏதோ பைத்தியம் மாதிரி ஒரு வியாதி பிடித்து, சில காலம் மிகவும் கஷ்டப்பட்டு மாண்டுபோனார். இதைப் பங்காளிகள் செய்த மாந்திரீகம் என்று ஊரில் சொல் லிக்கொள்ளவே சண்டை மிகுதியாகிவிட்டது. போக்கு வரத்து நின்றது. இருவகையினருக்குள்ளும் தீட்டுக் காப்பது மட்டும் இருந்ததே ஒழிய வேறு, 'இருந்தாயா, போனாயா' என்கிற உறவாட்டமே ஒழிந்தது.

"நில புலன்கள், அவர்களுக்கு அதிகமாகவும் நம்மவர்க்குக் குறைந்தும் வந்தன. ஆனாலும், ஊரில் தொட்டதற்கெல்லாம் போட்டி; சண்டை சச்சரவு; கச்சேரியில் சதா வியவகாரம். இதோடு நிற்கவில்லை.

"ஒரு சமயத்தில் அந்த வீட்டுப் பிள்ளை ஒரு வருக்கு, நல்ல அந்தஸ்து உள்ள ஒருவர் பெண்ணைக் கொடுப்பதாக நிச்சயித்து முகூர்த்தம் வைத்திருக் கையில், பிள்ளைக்குக் காக்காய் வலிப்பு உண்டென்று ஒரு கோள் கடிதம் போய்க் கல்யாணம் நின்றுவிட்டது. கடிதம் எழுதியவர் நம் பக்கத்தில் ஒருவர் என்று புகார் கிளம்பியது. இதற்குப் பதில் செய்யாமல் விடுவார்களா? உன் பாட்டனருக்குத் தம்பி ஒருவர், இங்கிலீஷ் படித்து, குடும்பத்தை நிமிர்த்திவிடுவார் என்று நம்பி யிருந்தார்களாம். அவர் சென்னப்பட்டணத்தில் படித்தாராம். அவருக்கு, பி. ஏ. பரீக்ஷை நாளைக்கு என்று இருக்க, இன்றைக்கு, 'உன் தாய் இறந்தாள்,

உடனே வருக' என்று தந்தி கிடைத்ததாம். மறு நாள் அவர் இங்கே வந்து, தாய் கலைபோல் கெட்டியாய் இருப்பதைப் பார்த்து, 'ஓகோ! இது தாயாதிக் காய்ச்சல். பெரிய அகத்துக்காரர் செய்த மோசம்' என்று நிச்சயித்தார்.

"இதைச் சும்மா விடக்கூடாதென்று, தந்தி ஆபீஸ் காரரைச் சாட்சி போட்டு வியாச்சியம் துவக்கினார்கள். அதனால் இரு குடும்பத்தாருக்கும் மிகவும் நஷ்டம்; மிகத் துன்பம். இரண்டு வருஷ காலம் கச்சேரிக்குப் போன வண்ணந்தான்! அந்த வீட்டுக்காரருக்குச் சிட்சையாகி ஜெயிலுக்குப் போக நேரும்போல இருந்தது. யாரோ ஒரு பாரிஸ்டர் துரை தப்பித்துவிட்டாராம். பத்தாயிரம் ரூபாய் கொடுத்ததாகச் சொல்வார்கள். உங்கள் சின்னத் தாத்தாவுக்கு பி. ஏ. பரீட்சையும் போய், வியாச்சியமும் போய், சீக்கிரத்தில் உயிரும் போய்விட்டது.

"உன் அப்பா நாளில்கூட அசூயையும் அகங்காரமும் குறையவில்லை. சுப்பராமன் அப்பாவுக்கும் உன் அப்பாவுக்கும் எப்பொழுதும் போட்டிதான். அவர் பணக்காரர்; நாமோ எல்லாம் இழந்து ஏழைகளாகிவிட்டோம். அவருக்கு எதிரியா நாம்? அவர் எதைத் தொட்டாலும் இவர் தடுக்கிறது; இவர் எதைத் தொட்டாலும் அவர் தடுக்கிறது. இவர் 'இன்சால் வென்டாம்'; ஊரில் தலையெடுக்க விடாமல் அடிக்கப் போகிறாராம். இவர்கள் என்னைக்குத்தான், 'கிருஷ்ணா! ராமா!' என்று தங்கள் காரியத்தை மட்டும் பார்த்துக்கொண்டு ஒழுங்காக இருக்கப் போகிறார்களோ! இவர்களால் ஊரே கெட்டுப் போகிறது. இவர்கள் ஒத்துப்போனால் கீழ மதுரையை, எவ்வளவு நேர்மையாய் வைத்துக்கொள்ளலாம்! ஒருவர், ஆற்றுக்குப் போகும் வழியைச் சீர்திருத்துவோமென்றால், மற்றவர் கூடாது என்கிறது. ஒருவர் கோயில் உத்ஸவம் நடத்த

வேண்டும் என்று தலைப்பட்டால், அதற்கு ஆயிரம் ஆட்சேபங்களைச் சொல்லுகிறது இன்னொருவர்.

"இந்தப் பள்ளிக்கூடம், ஏதோ நல்ல காலத்தினாலே இவர்கள் சச்சரவில் அகப்பட்டு விலகியது. சரிவர நடக்கிறதென்று எல்லாரும் சந்தோஷிக்கிறார்கள். பெரிய அகததுக்காரரிடம் பள்ளிக்கூடம் இருந்தபோது, உன் அப்பா, செய்யாத கலகமெல்லாம் செய்து, ஜில்லா போர்டாரிடம் ஒப்பிக்கவேண்டும் என்று கட்சி கட்டினதும் மனுப்போட்டதும் கலெக்டரிடம் ஓடினதும் கணக்கு வழக்கே இல்லை. போர்டார் எடுத்துக் கொள்வதாக ஏற்பாடானதும், சுப்பராமன் தகப்பனா விட்டாரா? எத்தனை மேஸ்ரிட்டு? எத்தனை கச்சேரி நடவடிக்கை? ஐயோ! போதும் போதும்! சிவ சிவா! சுப்பராமன் படிப்பைக்கூட ஒரு வருஷம் நிறுத்தி விட்டாரே கோபத்தாலே! இல்லாவிடில், அவன் உன்னைவிட இரண்டு வருஷம் பெரியவன்; மேல் வகுப்பில் அல்லவா இருக்கவேணும்? உனக்குச் சரியாக அல்லவோ ஆகிவிட்டான்? தம் அகமுடையாளுக்குப் பந்துவான ஒருவரை ஹெட்மாஸ்டராய்ப் போட்ட பிறகுதான் கொஞ்சம் கோபம் தணிந்தது. பிள்ளையை மறுபடியும் பள்ளிக்கூடம் அனுப்பினார். சுப்பராமன் நல்ல பிள்ளை. படாடோபம் இல்லை. மரியாதை, மட்டு, படிப்பில் சிரத்தை, ஸ்நானம், ஸந்தி எல்லாவற்றிலும் ஒழுங்கானவன். உங்கள் நாளிலாவது இந்தப் பங்காளிப் புத்தி மாறி ஒற்றுமையாய் வாழுங்கள்! நான் வேறென்ன சொல்லப் போகிறேன்? நம்மது பெரிய புராணம். நல்ல வேளையாக அப்பா இன்று ஊரில் இல்லை. இருந்தால் உங்கள் ஹெட்மாஸ்டர் மண்டை உடையும். அவர் வந்தால் நீயும் சொல்லாதே, நானும் சொல்லவில்லை."

அனந்தராமன் மிகவும் கூர்மையான புத்தி உடையவன். ஆனால் துள்ளிக் குதிக்கும் மாதிரி அல்ல.

எதுவும் யோசித்துத்தான் சொல்வான், செய்வான்.

மறு நாள் மாலையில் அவன் சுப்பராமனிடம் கலந்து பேசினான். அன்று மததியான்னம் ஹெட்மாஸ்டரே பெரியகத்துக்குப் போய, தாம் தவறுதலாய் வாயில் வந்ததைச சொல்லிவிட்டதாகவும், தப்பிததகதை மன்னிக்க வேணடும் என்றும் பெரியவரைக் கேட்டுக் கொணடாராம். "எங்கப்பா, 'பரவாயில்லை' என்று சொலலிவிட்டாராம்" என்றான் சுப்பராமன்.

"நாம் இந்த அசந்தாப்பத்தை வளாக்கக்கூடாது. மற்றப் பிள்ளைகள் வம்பு பேசினால் காதில படாதது போல் போய்விடுவது நலம். இரண்டு நாளில் எல்லாம் மறந்துபோய், விடும்" என்று பெரும் போககாகவே தொடாந்து யோசனை சொன்னான் சுப்பராமன்.

ஹெடமாஸ்டா சமரசமாயப் போகிறவா. சின்னவா திரும்பி வந்ததும் அவரிடமும் நேரில போய்த் தணிவுடன் கும்பிடு போடடுவிடடாா. அவரும், "உள்ளத்தைத்தானே சொன்னீா? அதில என்ன தோஷம்? நான் பெரியகத்துக்குச சளைததேன என்று சொலலவில்லையே! எதிரிககு எதிராக நிற்கிறேன் என்றுதானே சொன்னீா! அந்தப் போதான் எனக்கு 'வேணடியது' என்று பெருமை பாராடடினாா.

## 2

ஐந்து வருஷங்க ளாயின. சுப்பராமனும் அனந்தராமனும் திருச்சி காலேஜில் ஆனர்ஸ் பி. ஏ. க்குப் படிக்கிறார்கள. வயசு, முறையே இருபததிரண்டும் இருபதும்: பெரியவன் சரித்திரமும், சின்னவன் கணிதமும் எடுததுக்கொண டிருந்தாாகள. சின்னவன் மிகக் கெட்டிக்காரன்; முதல் வகுப்பில் அவன் தேறுவான் என்று எலலோரும் எதிர்பாாத்தாாகள். சுப்பராமனும் அவவளவு துடியிலலாவிடினும் தவறாமல் பரீட்சையில

தேறுவான் என்பது நிச்சயம். நல்லவர்கள் என்று பெயர் வாங்கிச் சிநேகமாகவே இருந்தார்கள். சுப்பராமனுக்குத் தம்பி மீது வெகு கவனம். சுரம், வயிற்றுநோய் ஏதாகிலும் வந்தாலகூட உடன் இருந்து உதவுகிறது, வைத்தியரை அழைத்து வருகிறது, மருந்து வாங்கிக் கொடுக்கிறது - இத்தகைய அன்பு முறையைப் பாராட்டி வந்தான். கீழ் மதுரை வந்தால மட்டும், சற்று ஒதுங்கினாற்போல இருந்து வந்தார்கள். இது தகப்பன்மாருக்கு வருத்தம் வரக்கூடா தென்பதற்காக. அவர்களோ பங்காளித் தனத்தைச் சற்றேனும் மறவாது நடத்தி வந்தார்கள். 'பிள்ளைகள் தாயாதி தாமதத்தை ஒழுங்காய்க் கடைப்பிடிக்க மாட்டார்கள் போல இருக்கிறதே' என்று இருவருக்கும் சந்தேகம் உண்டு, 'அந்த வீட்டுப் பயலோடு என்ன அவ்வளவு அந்தரங்கம்?' என்று அதிருப்தியாய்ப் பேசுவார்கள். பிள்ளைகளோ கலாசாலை மாணாக்கர் சபையில் தலைவனாக ஒருவனும், காரியதரிசியாக ஒருவனுமாய் ஒத்துழைத்து, உபாத்தியாயர், கூடப் படிப்போர் எல்லோருக்கும் நல்லவர்களாய் இருந்து, விள்ளாமல் விரியாமல், ராமலக்ஷ்மணர்கள்போல் இருந்து வந்தார்கள்.

சுப்பராமனை ஐ. சி. எஸ். பரீக்ஷைக்கு அனுப்பும் உத்தேசம் அவன் தகப்பனாருக்கு இருந்தது. சீமைக்கு அனுப்புவதற்குமுன் விவாகம் செய்துவிட வேண்டும் என்று எண்ணி, வரும் ஜாதகங்களைக் கவலையுடன் சோதிக்கலானார்.

உள்ளூர் ஜாதகம் ஒன்று நன்றாக இருந்தது. ஒரே பெண்; அழகி; எஸ். எஸ். எல். ஸி. வகுப்பில் படித்தாள். சொத்து யதேஷ்டம். இருபதாயிரம் முதல், முப்பதாயிரம் வரையில் மதிப்பு உண்டு. தாய் தந்தை இருவரும் கொடுக்கல் வாங்கல் செய்வதில் மிகத் தேர்ந்தவர்கள். சுப்பராமனுக்கு என்று அமைந்த கன்னி என்பது வெகு ஜன வாக்கு. நவ நாகரிகத்தை

ஓட்டி, 'சீமையிலிருந்து திரும்பிய பிறகு யோசிக்கலாம்' என்று பார்த்தான் சுப்பராமன். பலிக்கவில்லை. சீர், தக்ஷிணை முதலியவை தகராறு அதிகமாயில்லாமல் நிர்ணயமாயின. முகூர்த்தம் வைத்துச் சாமான்கள் சேகரித்து அழைப்புக் கடிதங்களும் புறப்பட்டன. வெகு நாளாக இல்லாத முழக்கத்துடன் நடைபெறும் கல்யாணம் என்று சுற்றிலும் உள்ள ஊரிலெல்லாம் உத்ஸாகமாய் எதிர்பார்த்திருந்தார்கள். பெண்ணுக்கு மட்டும் பூர்ண சம்மதமில்லை என்று கொஞ்சம் கொஞ்சமாக வெளியாயிற்று. மணப் பெண் ரூபத்தையே பார்ப்பாள் என்றவாறு ஜானகியின் விருப்பம் வேறு நோக்கங் கொண்டிருப்பதாகத் தெரிந்தது. அவள் தகப்பனார் அதைக் காதில் போட்டுக்கொள்ளவே இல்லை. தாய்க்குமட்டும் ஏதோ மனம் உறுத்திக்கொண்டிருந்தது. முடிவில் அலக்ஷ்யம் செய்யமாட்டாமல் தாய்திறமையுடன் பிரஸ்தாபம் செய்தாள். முதலில் சிறு பெண்களிடம் துவக்கி, ஊர்ப் பெண்டிர்களுக்கெல்லாம் தெரிந்தது. புருஷர்கள் காதிலும் விழுவே சுப்பராமன் 'இதென்ன?' என்று விசாரித்தான். விசாரித்தால் வெளியாகாத ரகசியம் கல்யாணக் காரியங்களில் உண்டோ?

சுப்பராமன் பருமன் அதிகம். கைகால்களை வீசி யானைபோல நடப்பான்! கண் மிகப் பெரிது. 'முழியன்' என்று சிலர் கூறுவதும் உண்டு. வயசு வித்தியாசமும் ஏழு. இதை எல்லாம் வைத்துக்கொண்டு கச்சேரி நடத்த முடியாதா?

சுப்பராமனுக்கு வெகு கோபம். தன்னிடம் காதல் இல்லாவிடினும் பொறுக்கலாம். வெறுப்பும் இருக்கிறதென்று தெரிந்தால் மானம் உள்ளவன் எப்படித் தாங்குவான்? வேண்டாம் என்று வலுவாய்த் தடுத்தான். துணிந்து தகப்பனிடம் ஆக்ஷேபித்தான். ஹெட்மாஸ்டரை மத்தியஸ்தமாய்க் கேட்க அவர், விவாகப் பிரயத்தனங்கள் பக்குவமான பிறகு நிறுத்து

வது பாங்கல்ல' என்று சொன்னதைத் தவிர, பெண் பாலர் மீதே கருணை காட்டி ஒரு புதிய நியாயமும் போதித்தார்: 'பெண் வேண்டாம் என்றால் புருஷனுக்கு எவ்விதக் குறையும் இல்லை. வேறு எத்தனையோ பெண்கள் கிடைப்பார்கள். புருஷனால் வேண்டாம் என்று தள்ளப்பட்ட பெண்ணுக்குத் தக்க வரன் கிடைப்பது கஷ்டம்; கூடவே கூடாது' என்று தீர்ப்புச் சொன்னார். ஹிந்துக்களுள் இத்தகைய எண்ணம் பலமாய் ஊன்றியது அல்லவாயினும், தற்சமயம் சந்தர்ப்பத்திற்கு ஒத்துக்கொண்டது. ஆகையால் புருஷர்கள் எல்லாரும் சேர்ந்து. சுப்பராமனை அடக்கி, 'பெண்ணைச் சேர்ந்தவர்கள் வேண்டுமானால் நிறுத்தட்டும்; நாம் நிறுத்தக்கூடாது' என்று ஓங்கி அடித்தார்கள்.

சுப்பராமனுக்கு ஆத்திரம் பொங்கியது: 'என் காரியம் அல்லவா? இதனால் விளையும் நன்மை தீமைகளுக்கு உட்பட வேண்டியவன் நான்தானே? நீங்கள் எப்படி எனக்கு விரோதமாய்த் தீர்ப்புச் சொல்லலாம்? வரன், கன்னிகை இருவரும் வேண்டாம் என்கிற விவாகத்தை நிறைவேற்றும் நாகரிகமும் ஒரு நாகரிகமா?' என்று தெளிவாக வாதாட முடியவில்லை. குழப்பமும் அச்சமும் மேலிட்டு உள்ளத்தில் சமாதானம் இல்லாமல் மிகவும் துயரப்பட்டான். அவன் தாய் ஒன்றும் புரியாமல், பிள்ளையின் மனம் நோகக் கட்டாயப் படுத்தலாமோ என்று தனக்கு அந்தரங்கமான சில பெரிய பெண்டிர்களை யோசனை கேட்க அழைத்தாள்.

கிழவி ஒருத்தி, சுமங்கலி; பத்துப் பிள்ளையும் பெண்ணையும் பெற்றவள். எல்லாவற்றையும் பார்த்தாள்; கேட்டாள். சுப்பராமன் காதில் விழ வேண்டுமென்றே உரக்க முடிவு கட்டித் தங்கு தடையின்றி மொழிந்தாள். "என்னமோ அம்மா, உங்கள் பாடு! நமக்கேன் நடுவிலே? இருந்தாலும் கேட்டீர்களே என்று சொல்கிறேன்: நாமெல்லாம் வாழ்க்கைப்படவில்லையா?

நம்மைக் கேட்டாளா, போனாளா? கூனிக்குந்தான் ஓர் அகமுடையான் இருக்கான்; குருடிக்குந்தான் ஓர் அகமுடையான் இருக்கான். தெத்துவாயனுக்குக் கல்யாணம் ஆகல்லையா? காக்காவலிப்புக்காரனுக்குக் கல்யாணம் ஆகல்லையா? இதெல்லாம் அந்த அந்தக் குழந்தைகளைக் கேட்டா நடக்கிறது? பெண்ணுத்துக்குப் போய்விட்டுத் தான் இங்கே வறேன். பெண் பாட்டிலே ஒரு மூலையிலே உட்கார்ந்திருக்கு. பசுவன் வைத்திருக்கு. நான் ஆனமட்டிலே கேட்டுப் பார்த்தேன். பேசினுத்தானே? இங்கிலீஷ் படிச்சுட்டுதாம். என்னோடு பேசப்படாதாம். அதென்னவோ இந்தக் காலத்துக் கெந்தல். பெண்ணைப் பெத்தவாளிடம் சொல்லலாம் என்று சொல்லிவிட்டு வந்தேன். 'இந்தா சாலாச்சி, மேளக்காரனுக்கு அச்சாரங் கொடுத்தாச்சு. பொடவை சோமன் வாங்கி, பீரோ பீரோவா வெச்சிருக்கு. ஊரெல்லாம் அழைச்சாச்சு; முறுக்கு அதிரசமெல்லாம் பண்ணிக் குமிச்சுக் கிடக்கு. அப்பளாம், கறிவடாம் எல்லாம் கூடை கூடையாக நிறைஞ்சு கிடக்கு. ஊறுகாய் கொஞ்சமா நெஞ்சமா? எத்தனை சாமான் போட்டுச் செய்திருக்கு? இதெல்லாம் வீணுவா போகிறது? குழந்தைகள் இஷ்டத்தைக் கேட்பதாவது! அதுகள் அப்படித் தான் சொல்லும். என்னத்தைக் கண்டுது? இளங் கண்ணு பயமறியாது. நீ உம்பாட்டுக்குப் பண்ணிப்பிடு! வர வருஷத்தைக் கண்டவாள் யாரு? ஏந்திரு, போ! எல்லாருக்கும் மேலே இருக்கானே, அவன் பாத்துக்குவான். நம்மாலானதை நாம் பார்க்கணுமோன்னோ? இதைத்தான் சாலாச்சிக்குச் சொன்னேன். உனக்கும் அப்படித்தான். இப்படிப் பிள்ளையும் பெண்ணும் சேருவது கஷ்டம். அழகாய்ச் சேர்ந்திருக்கு. சுப்பராமனுக்கு ஜானகிதான் வேணும். ஜானகிக்குச் சுப்பராமன்தான் வேணும். அதுகளுக்குத் தெரியவில்லை. நாம்ப தெரிஞ்சவா! அதுகள் போன வழி விடலாமோ? நடத்திவிடு. என் வாக்குப் பலிக்கும்" என்றாள் கிழவி.

# 3

விவாக ஏற்பாடுகள் விமரிசையாக நடந்தன. கல்யாணத்திற்கு முதல் நாள் மாலையில் மாப்பிள்ளை அழைப்பு நெருங்கியது. ஈசுவரன் கோயிலில் பிள்ளை யகத்துக்காரர் கூடுவது வழக்கம். புது உடுப்புக்கள் தயாரித்திருந்ததை அணிந்துகொள்ளச் சுப்பராமனைத் தேடினார்கள்; காணவில்லை. ஓர் இடம் பாக்கி இல்லை. வந்திருந்த அவன் நண்பர்களை எல்லாம் கேட்டார்கள். அனந்தராமனையும் கேட்டார்கள். அவனுக்கும் தெரியவில்லை. ஏழரை மணிக்கு நல்ல வேளை பாத்திருந்தது தவறி, பதினொன்று வரையில் பார்த்தும் பையன் அகப்படவில்லை. அவன் கிணற்றில் குளத்தில் விழுந்து சாகாமல் இருந்தால் போதுமென்று அவன் பெற்றோர்கள் நினைததார்கள். கொஞ்சங் கொஞ்சமாக, அவன் இரண்டு நாளாக இருந்த மாதிரியையும் பேசிய பேச்சுக்களையும் சிநேகிதாகள நினைத்து, எங்கேயோ ஒளிந்திருக்கிறான் என்றே நிச்சயித்தாகள்.

தன்னிடத்தில் சரியான மதிப்பு இல்லாத பெண்ணை எப்படி மணம் புரிவது, அதைவிட இழிவு உண்டா என்று அடிக்கடி சுப்பராமன் ஏங்கியதைச் சொன்னார்கள். ‘அவள் ஆசை வைத்திருக்கிற பிள்ளையை நான் அறிவேன். அவன்தான் அவளுக்கு ஏற்றவன். எப்படியாவது அவர்களைச் சேர்த்து வைத்தால் புண்ணியம் உண்டு’ என்றுகூட அவன் சொன்னதாக வெளியாயிற்று. “இது பற்றித்தான் ஒதுங்கிவிட்டான்” என்றார்கள்.

மறு நாள் பொழுதுவிடிந்ததும் பிள்ளை வீட்டிற்கு வந்திருந்த கூட்டமெல்லாம் கலைந்தது. பெண்ணகத்துக்காரரோ இரவெல்லாம் படுக்காமல் யோசனை பண்ணினார்கள். ‘இவ்வளவு ஏற்பாடுகள் செய்தது வீண் போகலாமா? எப்படியாகிலும் இந்தப் பந்தலிலேயே ஒரு

வரனைப் பிடித்துச் சுப காரியத்தை முடிக்கவேண்டும். இப்படி எவ்வளவோ கல்யாணங்கள் நடக்கவில்லையா? இத்தனை பையன்களில் கூடிய வரையில் நேரான பையன் ஒருவன் அகப்படமாட்டானா?' என்று ஒரு வருக்கு ஒருவர் பேசிக்கொண்டார்கள். ஜானகியை யாரும் நினைக்கவில்லை. அவள் தாய் மட்டும், 'நீங்கள் எல்லாம் யோசனை செய்வதில் என்ன குணம்? இந்தக் கல்யாணத்தைக் கெடுத்த அந்தப் பிடிவாதக் காரியைக் கேட்டு அல்லவா மறுபடியும் எத்தனிக்க வேண்டும்?' என்று எச்சரித்தாள்.

ஜானகி மற்றச் சாதாரணப் பெண்களைப் போலவா? பழைய வழக்கங்களை அதிகமாய்த் தொடர் பவள் அல்ல. அவளைக் கேட்டவுடன், "அனந்தராமனைத் தான் உத்தேசித்திருக்கிறேன்" என்று உறுதியாய்ச் சொல்லிவிட்டாள். அந்த ஏழைப் பையனை அவள் கருதியிருப்பாள் என்று அவள் தகப்பனார் நினைக்க வில்லை. "அது எப்படி முடியும்? அந்தக் குடும்பம் சளைத்துக் கிடக்கே" என்றார். "சளைத்தா என்ன? மறுபடியும் வலுக்காதா? புத்தி இருக்கு; படிப்பிருக்கு; குணம் இருக்கு. வேறு என்ன வேணும்?" என்று, ஜானகி துணிந்து கேட்டாள். "இதெல்லாம் என்ன பிரயோஜனம்? பணம் வேணும்; அதிருஷ்டம் வேணும்" என்றார் தகப்பனார். "உங்களுக்கு எப்பவும் பணந்தான்; பணமும் அதிருஷ்டமும் நான் போனால் கூட வரு கிறது" என்று சொன்னாள். கடைசியில் அவள் இஷ்டப் படி செய்வதென்று தாயும் தகப்பனும் தீர்மானித்தார் கள். தகப்பன் மனம் தளர்ந்தவுடன், கல்யாணத் தரகுக் காரர்கள் இங்கும் அங்கும் தூது ஓடிச் சீக்கிரத்தில் முடிவு செய்தார்கள். பிள்ளைக்கு மட்டும் கலக்கம் தெளியவே இல்லை. தனக்கு விவாகம் என்கிற நினைவே சற்றும் இல்லாதவனைத் திடீரென்று பிடிக்கவே, ஒன்றும் திக்குத் திசை புரியாமல் மயங்கினான் அனந்த ராமன்.

"ஆகட்டும்" என்று அவன் வாயால் கனிவொன்று சொல்லவில்லை. குருடன் தன் கழுத்தில் விழுந்த மாலையைப் பாம்பு என்று நடுங்கி எறிவதைப்போல, "ஐயோ!" என்று அலறவிடினும், முகத்தில் உதவாக மாவது, களிப்பாவது தோன்றவில்லை.

## 4

சுப்பராமனின் கல்யாணத்திற்கு என்று வந்திருந்த சிநேகிதர்கள் இவனிடம் அதே பிரீதி வைத்திருந்ததால் அவனை ஆட்டிக் குலுக்கி, "கொஞ்சம் சிரியேன்" என்று தைரியப்படுத்தினார்கள். "எல்லாம் சரிதான். அண்ணா என்ன சொல்வான்! அவனுக்குத் துரோகம் அல்லவா இது?" என்று மணையில் உட்காரும் வரையில் தயங்கினான் அனந்தராமன்.

அம்மான் தோள் ஏறி, மாலை மாற்றும் பொழுது கூட அவனுக்குத் தெளியவில்லை. ஜானகி மிகக் கூர்மை ஆதலால், அவனுக்குத் தன்னிடம் சுதந்திர புத்தி வர வேண்டும் என்று புன்சிரிப்பாலும் கடைக்கண் நோக்கினாலும் மயக்கினாள். இதனால் அவன் சங்கோசம் அதிகமாயிற்றே ஒழிய வேறில்லை.

"அண்ணா எங்கே? அவனைத்தான் கண்ணும் மனமும் தேடுகிறது. அவன் ஒப்பவேண்டாமா?" என்று தாலி கட்டியான பிறகுங்கூட அனந்தராமன் திருப்திக் குறைவாகப் பேசினான்.

"அண்ணா இருந்தால் இந்தக் கல்யாணம் ஏது? அவன் மறைந்ததால்தான் இந்தச் சம்பவம்" என்று தோழர்கள் ஆறுதல் சொன்னார்கள்.

"நிச்சயம் அவன் சம்மதிப்பான். அவன் இங்கே இருந்தால் எங்களைவிடச் சந்தோஷப்படுவான். கூத்தாளம் போட்டுக் குதிப்பான்" என்றார்கள்.

இது போன்ற உறுதிச் சொற்களைக் கேட்டு, ஒரு வாறு தான் செய்வது சரிதான் என்ற எண்ணம் தோன்றி, ஜானகியின் மகிழ்ச்சியைக் கண்டு, தானும் மகிழ்ந்ததாக வெளியில் காட்டிக்கொண்டான். ஆனால் எல்லாச் சந்தேகமும் ஐந்தாவது நாள் ஆசிர்வாதம் நடக்கையில், சுப்பராமனிடமிருந்து வந்த கடிதத்தால் தெளிந்துவிட்டது.

அது தஞ்சாவூரில் இருந்து ஹெட்மாஸ்டருக்கு அவன் எழுதிய கடிதம். கடிதம் கிடைத்ததும் ஹெட் மாஸ்டர் பரபரப்புடன் கொண்டுவந்து உரக்கப் படித்து, இங்கிலீஷில் இருந்ததைத் தமிழ்ப்படுத்திச் சொன்னார். சொற்கள் அதிகம் இல்லை. ஆனால் ஆழ்ந்த உணர்ச்சி நிறைந்திருந்தது: "நான் ஊரை விட்டு வரும் பொழுது என்ன நடந்தால் உத்தமம் என்று கடவுளைப் பிரார்த்தித்தேனோ அதுவே நடந்திருக்கிறது. அதை யும்விட மேன்மையானதொரு பயன் ஏற்பட்டிருக்கிறது. 'மூன்று தலை முறையாக அல்லும் பகலும் வளர்ந்து வந்த தாயாதிக் காய்ச்சல் இத்துடன் முடிந்தது. எங்கள் தகப்பன்மார்களுக்கும் கண திறந்து உற்றார் உறவுமுறையார் என்கிற ஞாபகம் பிறக்குமானால் நான் தன்யன் ஆவேன். சீக்கிரம் வந்து நேரில் உங்களுடன் ஆனந்தப் படுவேன்" என்று எழுதியிருந்தது.

ஹெட்மாஸ்டர் கல்யாண வீட்டில் கடிதத்தை வாசித்துவிட்டு. உடனே சுப்பராமனின் பெற்றோரிடமும் சென்று, அவன் அரிய நோக்கங்களைக் கொண்டாடி. "நின்ற கல்யாணத்திற்கு மேலான சம்பவம் இது. நூறு கல்யாணத்திற்குச் சமானம்" என்று மெய்ம் மறந்து மெச்சினார். சுப்பராமனின் தந்தை தம் மனைவி யிடம், "எனக்கு ஒன்று தோன்றுகிறது. ஹெட் மாஸ்டரை அனுப்பிச் சின்னத்துப் பயலை நல்ல வார்த்தை சொல்லி, உன்னையும் என்னையும் கிருகப் பிரவேசத்திற்கு அழைக்கச் சொல்வோம். அழைத்தால்

போகலாம் என்று நினைக்கிறேன். நீ என்ன சொல்கிறாய்?" என்று கேட்டார். அந்த அம்மணி சொன்னதாவது. "உங்களுக்கு மேல் எனக்கு இருக்கு. சுப்பராமன் யோகீசுவரன் போல் உபதேசிச்சிருக்கான். சின்னாத்துக்காராள் அழைச்சாலும் அழைக்காட்டாலும் பெரியாத்துக்காராள் நாம் போகலாமே! புறப்படுங்கோ!—"

# 'நம்ப ராமப்பா'

நம்ப ராமப்பாவைப் போலுண்டோ? 'நபூதோ நபவிஷ்யதி.' இந்தக் காலத்துப் பிள்ளைகளுக்கு ஸம்ஸ்கிருதத்தில் சொல்லி என்ன பிரயோஜனம்? 'அப்படி ஒருவர் இருந்ததும் இல்லை, இருக்கப் போகிறதும் இல்லை.' நான் சொல்வது அறுபது வருஷத்திற்கு முந்திய கதை. எனக்குப் பத்துப் பன்னிரண்டு வயசு இருக்கும். ராமப்பாவுக்குச் சுமார் எழுபது இருக்கும். கொஞ்சம் கூனியிருப்பார். நல்ல கறுப்பு. தொட்டால் ஒட்டிக்காதே ஒழிய, கறுப்புத்தான். ஆள் நல்ல வாட்ட சாட்டமாயிருப்பார். ஓர் ஆச்சரியம்: கிழவரானாலும் தலை வழுக்கை இல்லை. தலையிலும் முகத்திலும் மயிர் தும்பைப்பூப் போல வெளுப்பேறி இருக்கும். பார்க்கும் போது எங்களுக்கெல்லாம் வேடிக்கையாக இருக்கும். ஏதோ ஒரு வகைக் குரங்குமாதிரி தோன்றும்; முகத்தின் அழகும் ஏறக்குறைய அப்படித்தான்.

அவர் க்ஷவரம் செய்துகொண்டதே எனக்குத் தெரியாது. நாள், நக்ஷத்திரம், திதி எல்லாம் சேர வேண்டுமே! ஊரில் இரண்டு பேர்களே அம்பட்டர். அவனுக்கு இரண்டு நாள் முன்னமேயே சொல்லி வைக்கவேண்டும். கூலிக்குப் பதக்கு நெல்லைத் துணியில் கட்டிக்கொண்டு போகவேண்டும். அந்த நாளில் அம்பட்டனுக்கு மட்டும் கையிலேயே கூலி கொடுத்தாக வேண்டும். "ஆகட்டுமே, இன்னும் பத்து நாள் போகட்டுமே? என்ன அவசரம்?" என்று சொன்னாலோ, ராமப்பாவின் மயிர் வளர வேண்டியதுதான்.

கையில் எப்பொழுதும் ஒரு கெட்டிக் கழி இருக்கும். சில வேளையில மூங்கில் கழி, சில வேளையில் பூவரசங் கழி. தினமும் காலையில் குடமுருட்டியில் நீராடி வேஷ்டியைச் செவ்வையாய்த்

தோய்த்துக்கொண்டு, செப்புச் செம்பு, செப்புப் பஞ்ச பாத்திரத்தில் தீர்த்தம் எடுத்து வருவார். துணி வெளுப்பாகவே இருக்காது. வண்ணான் கையில் பட்டால்தானே? ஏதோ ஒருவிதப் பழுப்பு நிறம் ஏறி விகாரமாக இருக்கும். சதையெல்லாம் குன்றி, சின்னச் சின்ன வெடிப்பாயிருக்கும். ஆனால் மிகவும் உறுதி; செருப்புத் தோல் மாதிரி. கையைப் பிடித்தாரானால எங்களுக்குள் ஒரு பையனும் திமிர முடியாது.

தூரப் பார்வைக்கு என்னவோபோல்தான் இருப்பார். கிட்டப்போய்ப் பேசத் தொடங்கினால் உள்ளே ஆள் இருக்கிறார் என்று தெரியும். உலக நடவடிக்கையெல்லாம் நன்றாய்ச் சொல்லுவார். எப்பொழுதும் ஏழெட்டுப் பையன்களாவது சுற்றியிருப்பார்கள்.

சிரிக்கச் சிரிக்கக் கதைகளும் பண்டைக் காலத்து வரலாறுகளும் அவர் மெதுவாய்ச் சொல்லிக்கொண்டேயிருப்பார். கேட்க ஆசையா யிருக்கும். பையன்களெல்லாம்வாயை, 'ஆ!' என்று திறந்துகொண்டே இருப்போம், சொறிந்து கொடுத்த மாடு என்பார்களே, அதுபோலத் தான் சுற்றி யிருப்போம். சுத்த வெகுளி. உள்ளதை உள்ளபடிதான் சொல்வார். ஆனால் எங்களுக்குச் சில வேளை 'அவுட்டாவோ' என்று தோன்றும். யாராகிலும் துணிந்தவன், "என்ன! கொஞ்சம் கைச்சரக்குக் கலந்திட்டாப்பலே இருக்கே?" என்பான். "ஏலே! வழிங்கிப் பயலே! பேசாமல் கேட்பாயா?" என்பார். அதிகக் கோபம் வராது. 'வழிங்கிப் பயலே' என்று அவர் சொல்வது வேடிக்கையாக இருக்கும். அதைக் கேட்பதற்காகவே சில பையன்கள் அவரைப், 'பொய், புளுகு' என்று சொல்லிச் சீண்டுவார்கள். ஒரே ஒரு தடவை தான் பொறுக்கமாட்டாமல் கோபம் வந்து கழியைத் தூக்கினார். நாங்கள் திக்குக்கு ஒருவராய் ஓடியே போய் விட்டோம். உடனே நம்ப ராமப்பாவுக்கு மனசு இளகிப் போயிற்று. கழியை எட்டித் தூரத்தில் எறிந்தார்.

"வாங்கோடா, வழிங்கிப் பயல்களா!" என்று அழுத்தம் திருத்தமாய்க் கூப்பிட்டார்.

நம்ப ராமப்பாவுக்குப் பசி பொறுக்காது. பசித்தால் பட படப்பும் கோபமும் வந்து விடும். சாப்பாட்டில் நல்ல தேட்டையான ருசி. புகழ வேண்டிய சமயங்களில் புகழுவார்; இகழ வேண்டிய சமயங்களில் இகழவும் இகழ்வார். ஊர்ப் பெண்டிர்களுக் கெல்லாம் ராமப்பாவின் மனம் ஒப்பினால்தான் சமையற்காரி என்று பேர் வரும். இன்னாருடைய சமையல் என்று சாப்பிடும்பொழுதே சொல்லி விடுவார். யார் யாருக்கு என்ன என்ன அம்சத்தில் திறமை உண்டு என்பது அவருக்குத் தெரியும். 'மின்னிலே போட்டு மோர்க்குழம்பு பண்ண வேண்டுமானால் கோடியாத்துக் குப்பிச்சி பண்ண வேண்டும்', என்பார். 'தேங்காய்ப் பாலுக்குப் பிறந்தாள் எங்க அம்மாமி சுந்தராம்பா', 'முறுக்குச் சுற்றுவதற்கு முத்துவுக்கு மிஞ்சி உண்டோ?' 'அணஞ்சாமி ஆமடையாள்தான் ஸோமாசி பண்ண வேணும். ஸோமாசி என்று கூப்பிட்டால் ஏனென்று கேட்குமே?' 'ஸ்ாய்யன் மேலத்தெரு அபிராமியோடு போச்சு. இனிமேல் ஸாய்யன் உணடோ?', 'போளி தட்டுவதில் ஒண்ணு நம்பர் எங்க மேலாத்து முத்துப் பாட்டி. அவள் பெண் ஸரஸ்வதியும் பரவாயில்லை. சீக்கிரத்தில் அந்தப் பதவிக்கு வருவாள்' - என்று இப்படி அவா வாயால் நன்மதிப்புப் பெற்றவர்களுக் கெல்லாம் பெருமை சொல்லி முடியாது. ராஜகாத்தில் முத்திரை போட்டுச் சாஸனம் வாங்கிவிட்டாற் போல்தான்.

ஸமாராதனைக்குச் சாப்பிடப் போனால் 'நம்ப ராமப்பாவுக்கு இது பிடிக்கும், அது பிடிக்கும்' என்று பெண்களும் புருஷர்களும் மேல் மேலாய்ப் போடுவார்கள்.

ஆனால் அவருக்கு ஒரு தெரியாத்தன்மையும் உண்டு. எது முதலில் நன்றாயிருக்கிறதோ அதையே

அதிகமாய்ச் சாப்பிட்டு விடுவார். பசியின் கொடுமையோ என்னவோ தெரியாது; பின்னால் வந்தவையும் நன்றாக இருந்தால், 'அடடா! மோசம் போனேனே!' என்று விசனப்படுவார். 'வழிங்கிப் பயல்கள், எல்லாரும் பார்த்துக்கொண்டுதானே இருக்கின்றார்கள்? "ராமப்பா, இன்னது இன்னது வரப்போகிறது" என்று சமயத்தில் சொல்ல வேண்டாமா?' என்பார். 'இத்தனை வயசாச்சே? பதார்த்தங்கள் இன்னது இன்னது வருமே! தக்கபடி அளவாய்ச் சாப்பிடவேண்டுமே என்று தெரியாதா?' என்று சமயம் பார்த்து நாங்கள் கேட்பது உண்டு. 'வாஸ்தவந்தான். அதேதோ ஒரு மாதிரி ஆசை. "கையில் ஆப்பிட்டதை விடாமல் தட்டி விட்டால் நல்லது. பின்னால் எப்படி இருக்குமோ என்னவோ?" என்று தோன்றுகிறது. பின்னால் வரப் பட்டதோ முக்கால்வாசி நன்றாகவே இருந்து தொலைக் கிறது. சனி! தர்மசங்கடந்தான். அதையும் வஞ்சனை யில்லாமல் தின்றுவிட்டு முழிக்கவேண்டி வருகிறது' என்பார்.

இவ்வளவு நல்லவராயிற்றே! நம்ப ராமப்பாவிடத் தில் எல்லாருக்கும் பயந்தான். ஒருவரும் எதிரில் நின்று சண்டை செய்ய மாட்டார்கள். அவ்வளவு பலமும் தைரியமும் அவருக்கு உண்டு. பெரியவர்கள் ஆகட்டும், சிறியவர்கள் ஆகட்டும், என்ன அடி தடியாக இருந்தாலும் சரி; ராமப்பா வந்து, 'என்னடாது? என்னிடம் சொல்லிவிட்டுப் பிறகு வேண்டுமானால் சண்டை போடலாம்' என்றால், சண்டையை நிறுத்தி அவரிடம் இரண்டு கட்சிக்காரர்களும் தங்கள் நியாயத் தைச் சொல்லிக்கொள்வார்கள். கூடிய வரையில் பக்ஷபாதம் இல்லாமல் சமாதானமும் செய்துவிடுவார். அவருக்கு இரவு, இருட்டு என்ற பயம் கிடையாது. 'பேயாவது, பிசாசாவது! என்னிடம் வரச் சொல், பார்ப்போம்' என்பார். யார் வீட்டிலாவது பெண் கள் பேயாடுகிறார்கள் என்றால், முதலில் தாமே போய்

விடுவார். அவர் நாளில் மந்திரவாதிக்கு விசேஷமாய்ப் பிழைப்பே இல்லை. பெண்களைப் பிரம்பால அடிப்பார். அக்கம் பக்கம் பார்த்துப் பெரியவர்கள் ஒருவரும் இல்லை என்றால் கையாலும் 'பட் பட்' என்று போட்டு விடுவார். வலி பொறுக்காமல் பிசாசெல்லாம் அலறும்.

பேயை ஓட்டத்தான் போவாரோ? - வியாதியை விரட்டவும் போவார். யாராகிலும் வந்து கூப்பிடுகிற வரையில் வைத்துக்கொள்ளமாட்டார். யாருக்கோ, என்னவோ என்று கேட்டால் போதும்; எந்த வியாதியாக இருக்கட்டும். 'இதோ பாருங்களேன், மூணே நாளில் ஸ்வஸ்தம் பண்ணி எழுந்திருந்து ஓடும்படி செய்கிறேன்' என்று தங்கு தடையில்லாமல் தைரியம் சொல்வார்.

மூலிகை, வேர், திராவகம், எல்லாம் தெரியும் என்பார். லேகியம், சூர்ணம், பற்று முதலியவை எதிரில் வந்து கைகட்டிப் பேசும். உப்பில்லாப் பத்தியம், புளியில்லாப் பத்தியம், பட்டினி - எல்லாம் கடுமையாப் போடுவார். நல்ல வைத்தியர் இல்லாத ஊரில் ராமப்பா போல் ஒருவர், 'பயப்படாதேயுங்கள், நான் ஒரு கை பார்க்கிறேன்' என்று வலுவில் வந்து சொன்னால், ஒன்றும் தோன்றாமல் கையைப் பிசையும் ஜனங்களுக்கு ஏதோ ஒரு தெய்வம் கை தூக்கி அபய தானம் கொடுத்ததுபோல் இருக்கும். ராமப்பா ஊரில் இல்லாமலாவது, வேறு யாது காரணத்தாலாவது வரவில்லையென்றால் அதுவே அபசகுனம், துரதிருஷ்டம் என்று எண்ணுவார்கள்.

நான் நேரில் கண்ட ஒரு சம்பவத்தைச் சொல்கிறேன். எங்கள் கிராமத்தில் கீழைத் தெருக் கோடியிலே சிவராமன் பிள்ளை கோபாலன் என்று ஒரு வைதிகப் பிராமணன் உண்டு. ஒரு நாள் அஸ்தமிக்கப் போகிற சமயத்தில் பெருங் கூச்சல் அவன் வீட்டில்

கேட்டது. ஊரெல்லாம் கூடிப் போய்விட்டது. கோபாலன் கிழக்கு முகமாக உட்கார்ந்திருக்கிறான். அவன் மனைவியும் பிள்ளையும், சூடம் சாம்பிராணி யெல்லாம் போட்டுச் சுற்றிச் சுற்றித் தூபம் போடு கிறார்கள். 'ஸ்வாமி! மலையேறவேண்டும், ஸ்வாமி! மலையேறவேண்டும்' என்று வணக்கமாய்க் கெஞ்சிக் கதறுகிறார்கள். கோபாலனோ, 'ஆகா, ஊகூ!' என்று அலறிக்கொண்டு, 'கையை விடுங்கோ, இதோ போக வேண்டும்! அதோ பாருங்கோ, பரமசிவன் பார்வதி ஸமேதராய் விருஷபாரூடராய் அழைக்கிறாரே, தெரிய வில்லையா, உங்களுக்கு? மூட ஜனங்களே! இப்படியே ஸசரீரனாய்ப் போகிறேன்', என்று கூச்சல்போட்டு இரண்டு கைகளையும் தூக்கிக் காட்டுகிறான். பிடிப்பவர் யாவரையும் தள்ளிவிட்டு எழுந்திருந்து ஓடிப் போகிற வன்போல் கும்மாளம் போடுகிறான். ஊர்க்காரர்களோ, 'இதென்ன விபரீத காலம்' என்று சிலர் மெதுவாயும், சிலர் உறுதியாயும் பேசிக்கொண்டு பிரமித்து நிற்கிறார் கள். இந்தக் குழப்பத்தில், 'நம்ப ராமப்பா வந்துட்டார்! நம்ப ராமப்பா வந்துட்டார், வழி விடுங்கோ!' என்று சத்தம் கேட்டது.

எல்லாரும் விலகவே, ராமப்பா கோபாலனின் எதிரில் நின்றார். கோபாலன் அவரை ஒரு தரம் பார்த்துவிட்டு முன் போலவே, 'என்னை விடுங்கோ, பகவானை எல்லாரும் பாருங்கோ; ஸாஷ்டாங்கமாய் நமஸ்காரம் பண்ணுங்கோ' என்று உறுதியாய்க் கூவினான். அநேகம் பேர் மேல் துணியை இடுப்பில் கட்டிக்கொண்டு விழுந்து விழுந்து கும்பிட்டார்கள்.

ராமப்பா கொஞ்சமேனும் வணங்காமல் கோபால னின் முகத்தருகில் போய் மோந்து பார்த்தார். ஏதோ திருட்டைக் கண்டு பிடித்தவர்போல் அவன் கைகளைத் தம் கைகளால் கெட்டியாய்ப் பிடித்தார். கோபாலன் பலங் கொண்டமட்டும் திமிரி, "மற்றவர்

களைப் போல நமஸ்காரம் பண்ணடா!" என்று அதட்டிச் சொன்னான்.

"நமஸ்காரமா உனக்கு? இதோ பார் நமஸ்காரத்தை!" என்று சொல்லி, வலது கையை ஓங்கிக் கோபாலனின் இடது கன்னத்தில் ஓர் அறை அறைந்தார். 'பளீர்' என்று ஓசை கேட்டது. "ஐயோ! ஐயோ!" என்று சிலர் சத்தம் போட்டார்கள். கோபாலனோ ஒரு கணம் அசைவற்று நின்று மயக்கம் தெளிகிறவன் விழிப்பதுபோல் விழித்து, 'அப்பாடா!' என்று கன்னத்தைத் தடவிக்கொண்டு ஓடி பின் வாங்கி, "ராமப்பா! இந்தக் கன்னத்திலும் ஓரடி கொடுங்களேன்" என்றான். அவன் மனைவியும் பிள்ளையும் மற்றும் அநேகரும், "ஐயோ! வேணடாமே! ஐயோ! வேணடாமே!" என்று கூச்சல் போட்டார்கள்.

ராமப்பா அவனையே வெறிக்கப் பார்த்து, "புத்தி தெளிஞ்சு தாடா?" என்று கேட்டார். ஒன்றும் சொல்லாமல் ஒரு முழி முழித்தான். "இன்னும் மயக்கம் முழுக்கப் போகல்லே?" என்று சொல்லிக் கொண்டே இடது கையால் அவன் வலது கன்னத்தில் பளீர் என்று அடித்தார். அடித்துவிட்டு, "உள்ளத்தைச் சொல்லு, என்ன சாப்பிட்டாய்?" என்று கேட்டார். "கஞ்சா தின்னேன்" என்றான்.

"யார் கொடுத்தது?"

"குடியானவத்தெரு சுப்பரமணியன்."

"கொண்டா அந்தச் சுப்பரமணியப் பயலே!" என்று சுக்கிரீவன்போல் ஆக்ஞை பண்ணினார்.

இரண்டு பேர் குடியானவத் தெருவை நோக்கி ஓடினார்கள். "அவனுக்கு என்ன பைத்தியமா? இத்தனை நாழி, 'பஞ்சநாடு பொழுதுவிடிய' என்று ஓடியிருக்க மாட்டானா?' என்று ஒருவருக்கு ஒருவர் சொல்லிக் கொண்டார்கள். ராமப்பா கூடம் சாம்பிராணி

முதலிய தூபங்களைத் தூரக் கொண்டுபோய்ப் போடச் சொல்லிவிட்டு, கோபாலனைக் கிணற்றங்கரையில் உட்கார வைத்து, இரண்டு மூன்று குடங்களை வரவழைத்து, குளிர்ந்த ஜலத்தில் ஐம்பது அறுபது குடம் தலையில் கொட்டி வைத்தார். முக்கால்வாசி மயக்கம் தெளிந்தது. பிறகு கொஞ்சம் மோர் கொடுத்து உள்ளே படுக்க வைத்துத் தூங்கும்படி ஏற்பாடு செய்தார். கூட்டம் கலைந்தது. பிறகு கோபாலனின் மனைவியையும் பிள்ளையையும் அழைத்து, "நன்றாய்த் தூங்கட்டும். பேச்சுக் கொடுக்காதே யுங்கோ. பேச்சுக் கொடுத்தால் குடி கெட்டுப் போச்சு" என்று பயமுறுத்திவிட்டுப் போனார்.

அவர் எழுபத்தைந்து வயசில் இறந்து போனார். துக்கப்படாத ஜனங்கள் அந்த ஊரில் இல்லை. ஒவ்வொருவரும், 'நம்ப ராமப்பா!' என்று அழைக்க வேணுமானால் எப்படி இருக்கவேணும்? 'மிகவும் நல்ல மனுஷன்: தேகத்தில் எவ்வளவு பலமுண்டோ அவ்வளவு பலமுண்டு மனசிலும். எந்த வீட்டில் சங்கடம் இருந்தாலும் என்ன என்ன என்று தம் காரியம்போல் பார்த்து ஏதாவது ஓர் உபாயம் செய்து விட்டுத்தான் போவார். இனி ஊருக்கு ஒரு தீராத குறைதான். நல்ல உபகாரி. உத்தமமான ஜன்மம் கிடைக்கும். இனிமேல் அந்த மாதிரி எங்கே இருக்கா? விரலை மடக்கு, பார்ப்போம்'......இப்படியெல்லாம் அவர் காலமான பிறகு நெடு நாட்கள் சொல்லிக் கொண்டிருந்தார்கள்.

முற்றும்

இந்தப் புத்தகம் மகா
கனம் ஸ்ரீநிவாச சாஸ்திரி
யார் அவர்கள் வாழ்க்கை
யில் நடந்த சில சம்பவங்
களையும் அவர் கண்டும்
கேட்டும் அநுபவித்த சில
செய்திகளையும் அவ
ராகவே சொல்லும் சில
கட்டுரைகளைக் கொண்
டது.

அந்தக் காலச் சமூக நிலை,
ஒரு சமூகத்தில் பழக்கத்
தில் இருந்த சில அபூர்வ
மான பழக்க வழக்கங்கள்
முதலியவைகளை அப்
படியே நம் முன் காட்டு
கின்றன, இந்தக் கட்
டுரைகள்.